உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

புகழேந்திப்புலவர்

அருளிச்செய்த

# நளவெண்பா

இது

சென்னைக் கிறித்தவ கலாசாலைத்

தலைமைத் தமிழ்ப்பண்டிதர்

வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி. ஏ.

பல பிரதிரூபங்களைக்கொண்டு

பரிசோதித்தது

சென்னை

ஆர். வெங்கடேஷ்வர் கம்பெனியாரால்

வெளியிடப்பட்டது

1923

விலை: அணா 6

# பொருளடக்கம்

# முகவுரை

செந்தமிழ் மொழிக்கலைச் செல்வர்கூட் டுண்ண
நளன்மடை போல வுளன்மகிழ் வுறுக்குஞ்
செம்பாக மாகவச் சீர்நளன் காதையை
வெண்பாவின் யாத்த வியத்தகு கவிஞர்

புகழேந்திப் புலவரென்பார். இவர் தொண்டை நாட்டிற் செங்கற்பட்டிற் கருகிலுள்ள பொன்விளைந்த களத்தூரில் துளுவவேளாளர் குலப்பாலாழியிற் கௌத்துவ மணியெனத் தோன்றி இளம்பருவத்திலேயே கல்வி கற்பான் புகுந்து செந்தமிழிலக்கிய விலக்கணக் கடலினுட்டிளைத்து விளையாடிக் கவிமதஞ் சொரியுங் களிறெனை வுலவா நின்றார். இத்தகைப் புலவர் பெருமான் செந்தமிழ் நாட்டிற் கேகி ஆண்டுள்ள பாவலர் தம்மொடும் பயிறல் கருதிச் சோணாடு கடந்து,

"சந்தனப் பொதியச் செந்தமிழ் முனிவனுஞ்
சௌந்தர பாண்டிய னெனுந்திரு நாடனுஞ்
சங்கப் புலவருந் தழைத்தினி திருக்கு
மங்கலப் பாண்டி வளநாடு"

சென்று, அவ்வயிற் கூடலம் பதிக்கட் பாண்டிய ராசனு லாதரிக்கப் பெற்று அவன்றன் வாயில் வித்துவானு யமர்ந்தனர். இவரை யாதரித்த பாண்டியனே வரகுண பாண்டியனிரண்டாவ னெனன்பர்.

இவ்வாறு நந்தங் கவிஞர் கோமான் பாண்டியனவைக் களத்து வித்துவானுயிருப்புழிச் சோணாட்டி லரசுரிமை

யெய்தி யாண்டுகொண்டிருந்த குலோத்துங்க சோழன் முதலாவனுக்குப் போதகாசிரியரும், அவன்றன் சமத்தான வித்துவானுமாகிய ஒட்டக்கூத்தப் புலவர் தமது மாணாக்கனாய சோழராசற்குப் பாண்டியன் மகளை வதுவை பேசி முடிப்பான் மதுரைமா நகர்க்குப் போந்தனர். போந்து மாறனிடம் மன்றல் குறித்துப் பேசிக்கொண்டிருப்புழிப் பாண்டியன் புன்முறுவல் கோட்டிப் "பைந்தமிழ் வல்லீர்! நுந்தம் மன்னவன் எந்தங்குலத் திருமகளைக் கொளத்தகுங் குணவான் கொல்லோ? எம்மினு மவற்குள வேற்ற மென்கொலோ?" என்று வினவினன். என்னக் கேட்ட ஒட்டக்கூத்தர், சோழன் பெருமை தோன்றக்,

"கோரத்துக் கொப்போ கனவட்ட மம்மானே
கூறுவதுங் காவிரிக்கு வையையோ வம்மானே
யாருக்கு வேம்புநிக ராகுமோ வம்மானே
யாதித் தனக்குநிக ரம்புலியோ வம்மானே
வீரர்க்குள் வீரனொரு மீனவனோ வம்மானே
வெற்றிப் புலிக்கொடிக்கு மீன்கொடியோ வம்மானே
யூருக் குறந்தைநிகர் கொற்கையோ வம்மானே
யொக்குமோசோ ணாட்டுக்குப் பாண்டிநா டம்மானே."

என்றதோர் பாடலைச் சொற்றனர். அங்ஙனம் அது கேட்டருகிருந்த நந்தம் புகழேந்திப் புலவர் மனம் பொறாது எழுந்து, அதற்கு மாறாகப் பாண்டியன் பெருமை தோன்ற,

"ஒருமுனிவ னேரியிலோ வுரைதெளித்த தம்மானே
யொப்பரிய திருவிளையாட் டுறந்தையிலோ வம்மானே
திருநெடுமா லவதாரஞ் சிறுபுலியோ வம்மானே
சிவன்முடியி லேறுவதுஞ் செங்கதிரோ வம்மானே
கரையெதிரில் காவிரியோ வையையோ வம்மானே
கடிப்பகைக்குத் தாதகியங் கண்ணியோ வம்மானே

பரவைபணிந் ததுஞ்சோழன் பதந்தனையோ வம்மானே
பாண்டியனார் பராக்கிரமம் பகர்வரிதே யம்மானே''

என்றதோர் பாடலைப் பாடி அவர் கூற்றைக் கண்டித்தனர். அப்பொழுதே யொட்டக்கூத்தர்க்கு நம் புகழேந்திப் புலவர்மே லழுக்காறுண்டாயிற்று. பின்னர் ஒட்டக்கூத்தர், தக்கவாறு பலவற்றை யெடுத்துரைத்து, வழுதிமகளைச் சோழற்கு மணஞ்செய்தளிப்பான் நிச்சிதார்த்தஞ் செய்து போந்து, தம்மாணுக்கனாய சோழராசற்கு அச்செய்தியை யறிவுறுத்தார். உடனே சென்னியுந் தனக்குப் பிரதிநிதியாகச் சின்னாள் தான் மணவினை முடித்து வருங்காறும், அரசாளுமாறு ஒட்டக்கூத்தரைத் தன்னாட்டகத் திருத்திச் சேனைகளோடும் இட்டசன பந்து வர்க்கங்களோடு மேனைய பரிவாரங்களோடும் மதுரை சென்று ஆலவாயிற் பெருமானடிகளை வணங்கி, மாறன் மகளை மணஞ்செய்து கொண்டனன். பின்னர்ப் பாண்டியன் தன்னருந்தவச் செல்வமகட்குத் தான் கொடுத்த பாரிபோக வரிசையுடன் நந்தம் பாவலர் தலைவர் புகழேந்திப் புலவரையும் அவனுக்கு ஏற்ற வமயங்களிற் றக்கவாறு புத்தி கூறும்பொருட்டு அனுப்பினான்.

அவ்வாறே யவர் சோணாடு போந்தமை யுணர்ந்த வொட்டக்கூத்தர் பழம்பகைமைபாராட்டி அவரை மாவித்துவானென மதித்தலின்றி யிரக்கந்துறந்து கறுக்கொண்டு ''இவன் முன்னர் நமக்குப் பெண்கொடுக்க வொட்டாது தகைத்து நுந்தங் குல முதலியவற்றைப் பாண்டியனெதிரிற் பழித்துரைத்தோன்'' என்று கோட்சொல்லி யரசனை நம்புமாறு செய்து நந்தம் புகழேந்திப் புலவர் தம்பிரானைக் காவற்சிறையகஞ் செறித்தார். அவர் 'இது கர்மாநுசாரம்'' எனக் கருதி அச்சிறைக்கணிருந்து கொண்டு அதனருகே

தண்ணீர்க்குச் செல்லுறாஉம் மகளிர்தஞ் செவிக்கினிமை யாக, இக்காலத்தில் நங்கைப்பாட்டென வழங்குறாஉம் அல்லியரசி மாலை, பவளக்கொடி மாலை, புலந்தரன் களவு மாலை யென்னு நூல்களை யினிதிற் பொருள் விளங்குமாறு பாடி, அவர்கட்குக் கொடுத்து, அதுபற்றி யவர்கள் மன மகிழ்ந்து கொண்டுவந்து கொடுத்த நல்லரிசி, பருப்பு முதலி யனவற்றைச் சாளரவழியாய்ப் பெற்றுச் சமைத்துண்டு, மிகுந்ததைச் சிறைக் காவலர்க்கீந்து அவர்தமைத் தம்வயப் படுத்துக்கொண்டு காலங்கழித்து வருவாராயினார். இங் ஙனமிருந்து வருநாளில் ஒருநாட் சோழராசன் தனது பட் டத்தரசுவாவின்மீதிவர்ந்து வீதியிலுலா வரும்போது காவற்சிறைக் கோட்டத்தின் மேற்றளத்தில் நின்ற புகழேந் தியாரைத் தன்னாசிரியர் ஒட்டக்கூத்தருக்குக் காட்டி 'இவர் செந்தமிழ் மொழியிற் சிறந்த புலவரல்லரோ?' என்று வினவலும் அவர் தம்மினு மிழிந்தார் புகழேந்தியாரென்பது பட அவரை யிகழ்ந்து புனைவிலிபுகழ்ச்சியணியாக,

> “மானிற்கு மோவந்த வாளரி வேங்கைமுன் வற்றிச்செத்த
> கானிற்கு மோவவ் வெரியுந் தழன்முன் கனைகடலின்
> மீனிற்கு மோவந்த வெங்கட் சுறவமுன் வீசுபனி
> தானிற்கு மோவக் கதிரோ னுதயத்திற் றார்மன்னனே”

என்றதோர் பாடலைக் கூறினார். அது செவிக்கொண்ட புக ழேந்தியார் ‘ அப்பாடலை வெட்டிப் பாடவோ ஒட்டிப் பாட வோ?’ என்று சோழனைக் கேட்டுழி, அவன் ‘ ஒட்டியே பாடுதி’ யெனலும் நந்தம் ஆசுகவிவல்ல அறிஞர்,

> “மானவ னானந்த வாளரி வேங்கையும் வற்றிச்செத்த
> கானவ னானவ் வெரியுந் தழலுங் கனைகடலின்
> மீனவ னானந்த வெங்கட் சுறவமும் வீசுபனி
> தானவ னானக் கதிரோ னுதயமுந் தார்மன்னனே”

யென்றுபாடி யொட்டக்கூத்தர்தம் மேக்கழுத்தம் போக்கி ஞர். சோழன் அக்கணம் புகழேந்திப்புலவரிடம் மதிப்புங் கருணையுங் கொண்டனனேனும் தனக்கு ஒட்டக்கூத்த ரிடத்திலுள்ள அபிமானத்தா லவரைச் சிறைநீக்காது போயினன்.

இனி யிதுநிற்க. பாடல் பாடிக்கொண்டுவரும் பாவ லர்க்குச் சோழராசன் கண்டபடியெல்லாம்பரிசிலளிப்பதை யொட்டக்கூத்தர் தடுத்துவிட்டு இராச சமஸ்தானத்தில் வெகுமதி பெறக்கருதிப் போதரும் வித்வான்களைச் சிறைக் கோட்டத்திட்டு, தேவி கொலுவீற்றிருக்கும் நவராத்திரி யுற்சவகாலத்தில் அவர்தமை யழைப்பித்துத் தாம் பல்வ கைப்பட்ட கடுவினுக்களெழுப்பி, அவற்றைத் தக்கவாறிறுக் கத்தெரியாரை யவமதித்து வந்தனரேயன்றி, அந்தோ! அவர்தமை யிவ்விருவராகக் குடுமியோடு குடிமிமுடிந்து இறங்கி நிற்குமாறு தேவிமுன்னர் நிறுத்திப் பிடாரிக்கிடாட் டைக்கடா வெட்டுமாறுபோலச் சிறிதேனும் அருளின்றி அன்னர்தலைகளைப் பதைக்கப்பதைக்க வெட்டிப்பலிசெலுத் தும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தார். இத்தகைய கடு வழக்கத்தை யொட்டக்கூத்தர் மேற்கொண்டது இக்காலத் திற்போலவே யக்காலத்திலும் புல்லறிவாளர் பலர் பண்டி தர், மாபண்டிதர், கவி, கவிராயர், பாவலர், நாவலர், அட் டாவதானி, வித்துவான், வித்துவச்சிரோமணி யென்பன வாதிய பல்வகையவாய பட்டப்பெயர்களை யெவருங் கொடுக்கவேண்டிய அவசியமின்றித் தாமே சுயமாக வைத் துக்கொண்டு தாந்தோன்றிகளாய்த் திரியவொட்டாத வண் ணம் கல்வியி னருமை பெருமைகளையு மேற்றத்தாழ்வுகளை யுந் தெரிக்குறாஉம் நல்லவழியென வுள்ளவாறே நம்பியே போலும்! இதுபற்றியன்றே,

"நன்றி மறப்பது நன்றன்று" என்ற மூதுரைப்படி நன்றியை என்றும் மறவாது வாழ்ந்தன ரென்பதை அவர் வரலாற்றில் ஆய்ந்து காணலாம். தம்மை ஆதரித்த சோழ மன்னர் மூவருடைய புகழ் விளங்க மூவருலாப் பாடியதும், தக்கயாகப்பரணியில் இராசராசனை வாழ்த்தியதும், காங்கேயன்மீது நாலாயிரக்கோவை பாடி அவன் சீர்த்தி என்றும் நின்று நிலைபெறச் செய்ததும், ஈட்டி யெழுபது பாடிச் செங்குந்தர் வீரச்செயலைத் தெரிவித்தமையும், திருச்சிற்றம்பலமுடையான் பெருமாள்நம்பி, திரிபுவனச் சோழன், காவிரிப்பூம்பட்டினம் வாழ்ந்த செல்வர் சிலர் இவர்களைத் தாம் பாடிய நூல்களில் ஒவ்வொரு சமயத்தில் உயர்த்திப் பாடியதும் இவர் நன்றியறிவை நமக்குத் தெரிவிக்கின்றன.

"இடுக்கட் புண்படு நிரப்புக் கொண்டுழன்
றிரக்கச் சென்றவின் றெனக்குச் சிங்களந்
திருக்குற் றஞ்சும்வெஞ் சினத்துச் செம்பியன்
றிருக்கைப் பங்கயஞ் சிறக்கத் தந்தன
படுக்கக் கம்பளம் பரக்கக் குங்குமம்
பதிக்கக் கங்கணம் பரிக்கக் குஞ்சரம்
கடுக்கக் குண்டலம் கவிக்கச் சங்கினம்
கவிக்கப் பஞ்சரங் கலிக்கத் தொங்கலே"

என்ற கவியாற் சோழமன்னன் பல பரிசில் வழங்கிப் பாராட்டினன் என அறிகின்றோம்.

"பத்துக்கொண் டனதிக்கும் பதறிப்போய் முடியப்
பைம்பொற்று ரகைசிந்தப் பகிரண்டத் திடையே
மத்துக்கொண் டமுதத்தைக் கடையாழித் திருமால்
வடிவாகிப் புவிகைக்கொண் டருள்மாறு பரணு
முத்துப்பந் தரினிற்குங் குருளைக்குஞ் சினவேன்
முருகற்கும் பொதியக்கோ முனிவற்கும் பதுமக்
கொத்தற்குஞ் சடிலக்குந் தளருக்கு மல்லாற்
கூழைத்தண் டமிழுக்கேன் கொடியுங் காளமுமே"

என்ற இக்கவியாற் சோழமன்னன் பரிசில் வழங்கியபோது தன் பணியைத் தெரிவித்துத் தெய்வத்தன்மையுடைய கவிஞர்களைப் பாராட்டித் தன் புலமையைத் தாழ்த்தியது கண்டோம். இதனாற் கல்விச் செருக்குடையரல்லர் இவரெனவுங் கண்டோம்.

இராசராச சோழனுலாப் பாடி அரங்கேற்றியபோது அவ்வரசன் இவருக்குப் பரிசிலாக ஒவ்வொரு கண்ணிக்கும் ஆயிரம் பொன் வழங்கினன் என அறிகின்றோம் "தெள்ளித்தம், முன்னுயகரிலவன் மூதுலாக் கண்ணி தொறும், பொன்னுயிரஞ் சொரிந்த பூபதியும்," (சங்கர சோழனுலா) எனவும் "கூட. னராதிபன் கூத்தனெதிர் நண்ணியோர் கண்ணிக் கொராயிரம் பொனீந்த வுலாவும்" (தமிழ் விடுதூது) எனவும் வந்தன சான்றாகும்.

"மோனை முத்தமிழ் மும்மத மும்பொழி
யானை முன்வந் தெதிர்த்தவ ஞரடா?"

எனலும், அச்சுருக்குயவன் புலவரை நோக்கி,

"கூனை யுங்குட முங்குண்டு சட்டியும்
பானை யும்பண்ணு மங்குசப் பையல்யான்"

என மற்றை யீரடிகளையும்பாடி முடித்து விடைகொடுத்தலும் ஒட்டக்கூத்தர் வெட்கி, அவனைத்தனியே வேற்றிடம் நிறீஇ மற்றொருவனை விளித்தலு மொருகண் பொட்டையான வடபட்டன் போந்து நின்றான். அவனை நோக்கிய வொட்டக்கூத்தர்,

"விண்பட்ட கொக்குவல் லூறுகண் டென்ன விலவிலக்கப்
புண்பட்ட நெஞ்சொடு மிங்குநின் றாய்பொட்டை யாய்புகலாய்"

எனலும் சிறிதும் பின்வாங்காத மயிர்வினைஞன்,

"கண்பொட்டை யாயினு மம்பட்ட ஞன்கவி வாணர்முன்னே
பண்பட்ட செந்தமிழ் நீயுந் திகைகிடப் பாடுவெனே"

யென்று எடுத்தபாட்டை முடித்துவிடுத்தான். அதுகேட்ட புலவர் வெகுண்டனரேனும் அவனை யொன்றுஞ் செய்யக் கூடாமையா லவனை யப்புறம் நிறுத்திவிட்டு இன்னொருவனை விளித்து முன்போலக் கவிசொல்லி வினவாமல் வாசக நடையாய் அவனை 'நீ யார்? உன் பெயர் குல வரலாறுகள் யா? சொல்' என்றுகேட்டவளவில் எதிரேநின்ற கொல்லன்,

"செல்வன் புதல்வன் றிருவேங்கடவன் செகத்குருவாங்
கொல்லன் கவியைக் குறைசொல்லு வோரைக் குறடுகொண்டு
பல்லைப் பிடுங்கிப் பருந்தாட்ட மாட்டிப் பகைவர்முன்னே
யல்லும் பகலு மடிப்பேன் கவியிருப் பாணிகொண்டே"

என்றுபாடி விடைபகர்ந்தான். இவனையு மப்புறப்படுத்து வேறொருவனை விளித்தலும் போந்துநின்ற வேளாளனைப் பார்த்து 'மாவித்துவானைய நம்முன்னர் அற்பனைய நீயுமொரு

# ஆக்குவித்தோன் ஆகிய

## இரண்டாம் இராசராச சோழன் வரலாறு

இரண்டாம் இராசராசசோழன் தக்கயாகப் பரணி யென்ற இந் நூலைப் பாடுவித்தோன் ஆவன். விக்கிரம சோழனுடைய மைந்தன் குலோத்துங்கன். குலோத்துங்கன் மைந்தன்தான் இராசராசசோழன் II. இவன் கி. பி. 1146 ஆம் ஆண்டில் முடிசூடி 1173 வரை யரசு புரிந்தான் என்று கூறுவர். சிலர் 1162 வரைதான் அரசு புரிந்தான் என்பர் மறைந்தகால மட்டும் தெற்றெனத் தெரிந்திலது.

இராசகெம்பீரன், இராசபுரந்தரன், கண்டன், குலதீபன், சனநாதன், சொக்கப் பெருமாள், தெய்வப் பெருமாள், வரராசராசன் பரகேசரிவர்மன் திரிபுவன சக்கரவர்த்திகள், கோநேரின்மைகொண்டான் என்ற பட்டப் பெயர்களும் இவனுக்கு வழங்கின. காவிரிப்பூம்பட்டினம், பழையாறை, உறையூர், கங்கை கொண்ட சோழபுரம் இவை தலைநகரம் ஆகக்கொண்டு தனியரசு புரிந்தான். புவன முழுதுடையாள், தரணி முழுதுடையாள், உலகுடை முக்கோக்கிழானடிகள், அவனி முழுதுடையாள், தென்னவன் கிழானடிகள் என ஐவர் மனைவியர் இருந்தனர் என்பதும், அவர்களுட் பட்டத்துத்தேவி புவன முழுதுடையாள் என்பதும், நான்கு தலைநகரங்களிற் சிறந்தது காவிரிப்பூம்பட்டினம் என்பதும் மெய்க்கீர்த்தி இரண்டால் விளங்குகின்றன.

''பூ மருவிய புவிமாதும்'' ''பூ மருவிய பொழிலேழும்'' எனத் தொடங்குவன இரண்டும் இவன் மெய்க் கீர்த்திகள். அவற்றுள் ''ஆதி யுகங் கொழுந்துவிட்டுத் தழைத்தோங்கக் கோடாதறங் குளிர்தூங்க,

> மாரி வாய்த்து வளஞ் சுரக்கத் தாரணியோர் பிணி நீங்க,
> நல்லோர்தங் கற்புயர நான்மறையோர் தொழிலுயர
> எல்லோருந் தனித்தனியே வாழ்ந்தனமென மனமகிழ்ந்து
> ஒருவருட னொருவர்க்கு மொன்றினுட னொன்றுக்கும்
> வெருவருபகை மனத்தின்றி விழைந்துகாத லுடன்சேர
> இந்திரன்முதற் றிசாபால ரெண்மருமொரு வடிவாகி
> வந்தபடி தரைநின்று மனுவாணை தனிநடாத்தித்
> தந்தையிலோர்க்குத் தந்தையாகியுந் தாயிலோர்க்குத் தாயாகியும்
> மைந்தரிலோர்க்கு மைந்தராகியும் மன்னுயிர்கட் குயிராகியும்
> ........ ...................... ..அரசியற்கை முறைநிறுத்தி''

எனவரும் அடிகளால் இவன் இறைமாட்சியும் குடியாட்சியும் சிறப்பாகத் தோன்றுகின்றன இவன காலத்தில் வாமமதத்தினர், சைவர், வைணவர், பாசுபதர் என்ற பல சமயத்தவருங் கவலையின்றி வாழ்ந்தனர் என்பதைக் கல்வெட்டுக்களாற் காண்கின்றேம்.

இவன் இளமைக் காலத்தில் கூத்தர் மிகவும் முதுமைப் பருவமுடையவராக வாழ்ந்தனர் என்ற வரலாறு மெய்யாம். ஆசிரியர் ஓரமயம் இருக்கையினின்று எழும்பொழுதோ, எழுந்து நடக்கும் பொழுதோ தளர்ச்சியுற்று விழுவதனைக்கண்டு இம்மன்னர் பெருமான் ''நாத்தொலை

இவ்வாறெல்லாம் ஒட்டக்கூத்தராற் புகழேந்திப் புலவரெய்திய இடர்ப்பாடுகளனைத்தையு மொருநாட் சிலதிப் பெண்டிராற் றெரிந்துகொண்ட சோழராசன்மனைவி மிக்க மனவருத்தமுற்றுத் தன்னுயகன் ஒட்டக்கூத்தப் புலவர் கைச் சூத்திரபாவையாகி நியாயமுங் கருணையுமின்றித் தன் தந்தையின் சமத்தான வித்துவானுகிய புகழேந்திப் புலவரைச் சிறைக்கொட்டத்திரீஇயினனென்று கருதி யரசன் மீது கோபங்கொண்டு புகழேந்தியாரைச் சிறைநீக்க வெண்ணித் தன்றலைவன் பள்ளியறைக்குப் போதரும்போது தானுள்ளேயிருந்து கதவினைத் தாழிட்டாள். அஃதுணர்ந்த வண்ணல் அவளைப் பலவாறு வேண்டியுங் கதவு திறவாமையால் அவளது ஊடறுணிப்பா னெட்டக்கூத்தப் புலவரை யுய்த்தனன். அவர் சென்று,

"நானே யினியுன்னை வேண்டுவ தென்கொ னளினமலர்த்
தேனே கவாடந் திறந்திடு வாய்திற வாவிடிலோ
வானே றனைய விரவி குலாதிபன் வாயில்வந்தாற்
றானே திறக்குநின் கைத்தல மாகிய தாமரையே"

என்று பாடிய வளவில் அது கடுமையா யிருந்தமை குறித்து அவள் 'ஒட்டக்கூத்தர் பாட்டுக் கிரட்டைத் தாழ்ப் பாள்' என்று மொழிந்து முன்னினும் பலமாகத் தாழிட்டாள். இது செவி சாத்திய சோழர்பிரான் 'புகழேந்திப் புலவரை யாம் நெடுநாளாகச் சிறையகத்திட்டு வருத்தியமையால் நம்தேவிக்கு ஊடலுண்டாயிற்று' என்று உய்த்துணர்ந்து அக்கணமே புகழேந்திப் புலவரைச் சிறைநீக்கி யரசியின பிணக்கந் தணிக்குமா றேவலும், அவர் அந்தப் புரஞ்சென்று பள்ளியறை யருகர் நின்று,

"இழையொன் றிரண்டு வகிர்செய்த நுண்ணிடையேந்தியபொற்
குழையொன் றிரண்டு விழியணங்கே கொண்ட கோபந்தணி

மழையொன் றிரண்டுகைம் மாறு பரணனின் வாயில்வந்தாற்
பிழையொன் றிரண்டு பொறுரோ குடியிற் பிறந்தவரே"

என்று பாடலுங், கேட்ட இராசமாதேவி யுடனே மகிழ்ச்சி யடைந்து ஊடலொழிந்து கதவுந்திறந்தனள். அன்று தொட்டுப் புகழேந்திப் புலவர்க்கு நற்காலம் பிறந்தது; சோழராசனு மவரை யன்புடன் பாராட்டிவந்தனன். ஆயினும் அவர் தம்மைக்கண்டு ஒட்டக்கூத்தருக்கு அழுக்காறு முதிர்வதினாலும், அவ்வொட்டக்கூத்தர் தம் பேச்சைக் கேட்டு அவர் கூறியாங்கே யரசன் நடப்பதனாலும், அங்ஙனமே நிலையாயிருக்க விரும்புதலின்றி யரசனனுமதி பெற்று அச்சோணாட்டையே சேர்ந்த மள்ளுவ மென்னுஞ் சிற்றரசு நாட்டின்கண் முரணாரி லிருந்து அரசு செலுத்தி வந்த சந்திரன் சுவர்க்கி யென்னுங் குறுநில மன்னனிடத்துச் சென்று அவன்றன் வாயில் வித்துவானா யமர்ந்திருந்தார்.

இவ்வாறவர் அமர்ந்திருக்குங் காலத்தே சம்ஸ்கிருத மொழியினுள்ள நள சரித்திரத்தை வடமொழி வல்லுநர் பிரசங்கிப்பக் கேட்டுக்கொண்டு வீற்றிருந்த சந்திரன் சுவர்க்கி நந்தம புகழேந்தியாரை நோக்கி 'நீவிரிதனைச் செந்தமிழ்ப்பாவினிற் காப்பியமாக யாத்தல் வேண்டும்' என்றான். வேந்தனாணையைச் சிரமேற் கொண்ட கவிஞர் 'புலவர்க்கு வெண்பா புலி' யெனச் சிறப்பித் தோதப்பெறாஉம் வெண்பாயாப்பினிற் செவ்வனே புனைந்து யாத்து யாவருங் களிகூர்ந்து சிரகர கம்பஞ் செய்யுமாறு அவனதவைக்களத்தே யரங்கேற்றினர்.

இது கேள்வியுற்ற குலோத்துங்க சோழன் மிக்க மரியாதையோடும் புகழேந்திப் புலவரை வரவழைத்து உப

சரித்துத் தனதவைக்களத்தே யவர்பாடிய நளவெண்பா வைப்பிரசங்கித்து மீட்டு மொருமுறை யரங்கேற்றுமாறு வேண்டினன். அன்னணமே புகழேந்தியாரும் நாடோறும் பிரசங்கஞ் செய்துகொண்டு வாரா நிற்புழி,

> "மல்லிகையே வெண்சங்கா வண்டூத வான்கருப்பு
> வில்லி கணைதெரிந்து மெய்காப்ப—முல்லைமலர்
> மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
> புன்மாலை யந்திப் பொழுது"

என்னும் பாடலைச் சொல்லலும், அவை நடுவணிருந்த ஒட்டக்கூத்தப்புலவர் எழுந்து 'இதன்கண் மல்லிகை யரும்பினைச் சங்காகவும் வண்டினைச் சங்கூதுவோனாகவும் உருவகஞ் செய்துரைத்தது உசிதமே யெனினும் ஒக்குமாறன்றென்பது தேற்றம்! யாங்ஙனமெனிற் சங்க வாத்தியம் வாசிப்போர் அதனடியினை வாயில் வைத்தூதாநிற்பக் கண்டும் நீவிர் அதற்குமாறாக மேற்புறத்தூதும் வண்டினை யன்னணங் குறித்தது இயற்கைப் பொருளுணர்ச்சி யின்மைக் குற்றமாம்' என்றார். என்னக்கேட்ட வின்றமிழ்ப் புகழேந்திப் புலவர் 'கட்குடியனுக்கு வாயென்றும் மற்றொன்றென்றுந் தெரியுமோ?' எனச்சாதுரியமாக மறுமொழி தந்து நின்றார். இன்னு மிதுபோலவே யொட்டக்கூத்தர் இடையிடையே செய்து நின்ற ஆட்சேபங்களை யெல்லாம் புகழேந்தியார் அவ்வக்கணமே தக்கவாறு நிராகரித்துத் தம்பக்கங்களை நிறுவுவாராயினார். கம்பர் முதலிய வித்துவான்கள் நம் புகழேந்திப் புலவர்க்குச் சார்பாய் நின்று புகழ்ந்தார்கள். எனினும் ஒட்டக்கூத்தர் இவ்வாறு நாடோறும் தம் பாடலிற் குறைகூறலைப் புகழேந்திப் புலவர் பொறுக்கவில்லை. இவ்வொட்டக்கூத்தரை யெவ்வாறேனு மொழித்துவிடுதலே

நீயர்க்கேயாயினமையால் திங்கமைந்து நின்றது. இங்ஙனம் நெஞ்சுபோனபடி நீள நிலைத்திருந்த இவன், ஒரு நாள் வேட்டை மேல் விரும்பி வனத்திடையடைந்தான். அந்த நள மன்னன் கலிவயத்தனுய்ப் பிரிந்து போனமையால் அவனுடைய அருமைத் திருமனைவியாகிய தமயந்தி பெரிய ஓர் அரவின் வாய்ப்பட்டு அழுது புலம்பினாள். அவ்வமயம் இவன் துணிந்து போய் அப் பாம்பினைத் துண்டஞ் செய்தான். அப்பதிவிரதை உயிர்பிழைத்து நன்றி பாராட்டி இவனைத் துதிசெய்து நின்றாள்.

> ஆருயிரும் நாணும் அழியாமல் ஐயா இப்
> பேரரவின் வாயிற் பிழைப்பித்தாய்—தேரின்
> இதற்குண்டோ கைம்மா றெனவுரைத்தாள் வென்றி
> விதர்ப்பன்றான் பெற்ற விளக்கு.

அம்மாதர் திலகம் மனங்குளிர்ந்து இங்ஙனம் போற்றி நின்ற பொழுது இப்பேதைமகன் நிலையறியாமல் அவள்மேல் காதல் கொண்டான். இப்புலைமகன் நிலைமையை அத் தலைமகள் நோக்கினாள். தந்தையே! யான் உன் புதல்வி என்றாள். மகள் என்று சொல்லியும் இவ் அறிவிலி கேளாமல் அவ் அழகியை நெருங்கி என்னுடன் வருக என்று அழைத்தான். இவ்வெய்ய மொழியைக் கேட்டவுடன் ஐயகோ! என்று அழுது தவித்தாள். இவன் யாதும் இரங்காமல் அருகில் அணைந்தான். அவள் மறுகி ஓடினாள். விடுவதில்லை என்று இக்கொடியவனும் விரைந்து தொடர்ந்தான். அக் கற்புத் தெய்வம் கனன்று விழித்தாள். உடனே பக்கென் றெரிந்து இவன் பாழாய்விழுந்தான். இப்பழிமகன் செய்கையைப் புலவர் திலகராகிய புகழேந்திப் புலவர் அழகுறக் கூறியுள்ளார். அவ் அருமைப் பாடலை இதனடியில் காண்க.

> இந்து நுதலி எழில்நோக்கி ஏதேதன்
> சிந்தை கருதிச் சிலைவேடன்—பைந்தொடி நீ
> போதுவா யென்னுடனே என்றான்; புலைநரகுக்
> கேதுவாய் நின்றா னெடுத்து. (க)

> வேடன் அழைப்ப விழிபதைத்து வெய்துயிரா
> ஆடன் மயில்போல் அலமரா—ஓடினாள்
> ஆறெலாமாகச் சுரிகுழல்வேற் கண்ணிணி
> யாறெலா மாக அழுது. (உ)

"விக்கா வுக்கா வித்தா விப்போய் விட்டார் நட்டார் சுட்டேர் புக்கா
ரிக்கா யத்தா சைப்பா டூற்றே யிற்றே டிப்போய் வைப்பீர் கிற்பீ
ரக்கா டப்பேய் தொக்கா டச்சு ழப்பா டத்தீ வெப்பா டப்பூ
ணெக்கா டக்கா னத்தா டப்போ நெய்த்தா னத்தா னேச்சே வித்தே"
"நூற்கோ விப்பூ சற்பா சத்தே தட்டா மற்சா கைக்கே கிற்பீர்
மூற்கோ விக்கோ விப்பூ சித்தே முட்டா மற்சே வித்தே கிற்பீர்
வற்று நெட்டோ டைப்பா ரைச்சேன் மைப்பூ கத்தே நித்தா விப்போய்
நெற்று ஞற்று லைப்பா கிற்சேர் நெய்த்தா னத்தா னேசசே வித்தே"

என்ற பாடல்களைப் பாடினார்கள். இனி யிவற்றி னேற்றத் தாழ்வுகளொருபுற மிருப்ப, இச்செய்திக்கு மாறாக ஒட்டக் கூத்தரைப் புகழேந்திப் புலவர் வென்றன ரென்று,

"நூலார் கலைவல்ல செம்பியன் கேட்க நொடித்தமிக்க
கோலா கலவொட்டக் கூத்தனை யன்றுதற் கோலியென்று
மேலார் கவிசொல்லி நெய்த்தானத் தேசென்று வென்றுகொண்ட
மாலார் களந்தைப் புகழேந்தி யுந்தொண்டை மண்டலமே"

யென்ற தொண்டை மண்டல சதகச் செய்யுள் முழங்கா நிற்கும்.

இன்னுமொரு காலத்தில் திருக்குறுங்குடி யென்னுந் தலத்தினிடத் தெழுந்தருளி யிருக்குந் திருமாலின் மீது வல்லோசை மிக்க கட்டளைக்கலித்துறை யாப்பிற் பாடுமாறு கேட்டலும் ஒட்டக்கூத்தரும் புகழேந்தியும் நிரலே,

"தீக்குளெட் டெக்கயந் தூக்கமுற் றுத்திடுக் கிட்டலற
மைக்கடற் குட்சரந் தைக்கவிட் டோற்கிட மாமதுர
இக்குமுற் றிக்கணுச் சற்றுவிட் டுத்தெறித் திட்டமுத்தைச்
கொக்குமொக் கிக்கக்கி விக்குமச் சோலைக் குறுங்குடியே"
"எட்டெழுத் தைக்கருத் திற்குறித் திட்டுதித் தம்பரவுஞ்
சிட்டர்கட் குத்திருப் பொற்பதத் தைச்சிறக் கத்தருமவ்
வட்டநெட் டைப்பணி மெத்தையத் தற்கிடம் வாரிசப்பொ
குட்டினத் திக்குலந் தத்திமுத் தீனுங் குறுங்குடியே"

யென்ற பாடலகளைப் பாடினர். ஒன்றற்கொன்று உயர் விழிவுகளின்றிச் சிறந்து விளங்குறாஉம் அச்செய்யுட்களை மன்னவன் கேட்டு மகிழ்பூத்து இருவர்க்கு மொப்பச்சன் மானஞ் செய்து பாராட்டிவந்தனன்.

இஃதிவ்வாறாக ஒருநாள் உறையூரின்கட் சோழரா சன் ஒட்டக்கூத்தரொடும் புகழேந்தியாரொடும அரசமறு கிற் கானடையாய் உலவிச் செல்லா நிற்புழி, ஒரு வீட்டுத் தெருத்தெற்றியில் இருதாள்களையும் நீட்டிக்கொண்டு வீற் றிருந்த ஔவையார் சோழனைக் காண்டலும் ஒரு தாளை மடக்கிக் கொண்டனர். அவனருகிற் போதரும் புகழேந் திப் புலவரைப் பார்த்தவளவின் மற்றைத்தாளையும் மடக் கிக் கொண்டனர். அதன்பினர் அவர்களை யடுத்துப்போந்த ஒட்டக்கூத்தரைக் கண்டவுடனே அவரைக் கர்வபங்கஞ் செய்வான் கருதி யிருதாள்களையு மொருங்கே நீட்டினர். இதுகண்ட ஒட்டக்கூத்தர் வெட்கமும் வெகுளியு முடை யராய்த் தமிழ்மூதாட்டியாரை நோக்கி 'எம்மை இன்னணம் அவமதித்தது என்கொலோ?' என்று வினவலும், அவர் 'மன்னன் நாட்டுத்தலைவனாதலின் அவற்கொருதாளையும்' மன்னனிற் கற்றோன் சிறப்புடையனாதலிற் பாட்டுத்தலைவ ராய புகழேந்திப்புலவர்க்கு இருதாளையும் மடக்கினேம்; நீயோ புலமையோ னெனினும் புல்லியோனாய் வீண்பெரு மை பாராட்டுவோனாயினை யாதலின் இருதாளையும் நீட்டி னேம்' என்றுகூறி 'மெய்யாகவே நீயும் புகழேந்திப்புல வர்க்கு இணையாவையேற் சோழனையும் அவனது நாட்டை யுஞ்சிறப்பித்து மதிப்பெயரா மொருசொல்லை யொருபாடலி னீற்றடிக்கண் மும்முறைபெய்து பாடுதி; நின்னாற்றல் காண் குதும்' என்றேவலும், ஒட்டக்கூத்தர்,

"வெள்ளத் தடங்காச் சினவாளை வேலிக் கமுகின் மீதேறித்
துள்ளி முகிலைக் கிழித்துமழைத் துளியோ டிறங்குஞ் சோணாடா
கள்ளக் குறும்பர் குலமறுத்த கண்டா வண்டர் கோபாலா
பிள்ளை மதிகண் டிப்பேதை பெரிய மதியு மிழந்தாளே"

என்று பிள்ளைதாமெனவும் பேதை ஔவையாரெனவுந் தம்மறிவுகண்டு ஔவையார் அறிவிழந்தாரெனவும் ஔவையாரைக் குறிப்பினிகழ்ந்து பாடினர். அஃதுணர்ந்த ஔவையார் ஒட்டக்கூத்தரை நோக்கி 'ஒட்டா! ஒரு மதிகெட்டாய்!' என்றுகூறி நகையாடி, உடனே புகழேந்தியாரை நோக்கி 'யாஞ்சொற்றாங்கு நீவிர்பாடுமின்' எனலும் புகழேந்திப் புலவர்,

"பங்கப் பழனத் துழுமுழவர் பலவின் கனியைப் பறித்ததென்று
சங்கிட் டெறியக் குரங்கிளநீர் தனைக்கொண் டெறியுந் தமிழ்நாடா
கொங்கர்க் * கமரா வதியளித்த கோவே ராச குலதிலகா
வெங்கட் பிறைக்குங் கரும்பிறைக்கு மெலிந்தப் பிறைக்கும விழிவே [லே"

என்று ஒருபாட்டு மும்முறை பிறையெனுஞ் சொல்லையிறுதியடியிற்பெய்து பாடினர்; இதுகேட்டு ஔவையார் புகழேந்திப்புலவரைப் பெரிதுங் கொண்டாடினார். அன்று முதல் ஒட்டக்கூத்தர் தருக்கடங்கி யுறுதிகூடி யிருந்தனர் என்றுரைக்குப.

இனிப் புகழேந்திப் புலவரிருந்த காலமின்னதென வரைந்து சுட்டுவாம். ஒருசாரார் இவர் கம்பர் காலத்தினராதலின் "எண்ணிய சகாத்த மெண்ணூற் றேழன்மேல்" என்ற கம்பராமாயணச் சிறப்புப்பாயிரச் செய்யுளிற் கூறியாங்கு இவரது காலம் இற்றைக்குச் சற்றேறக்குறைய ஆயிரத்துப் பதினான்கு வருடங்களின் முன்ன ரென்பதாமென்ப. மற்றொரு சாரார் கம்பர்தங்காலம் சாலிவாகன சாகத்தும்

* "கொங்கைக்" என்பதூஉம் பாடம்.

807-ஆம் யாண்டென்பது உண்மை வழியான் நோக்கு மிடத்து நிலைநில்லாது; யாங்ஙனமெனில் ஆங்கில மொழியின் கண் அச்சிட்டுப் போதரும் † இந்தியபுராதன கலைஞன் என்னும் மாதாந்தப் பத்திரிகையினிடத்துக் கி. பி. 1063-ஆம் யாண்டிறுதியிற் பட்டத்திற்குப் போந்த இராசேந்திர சோழனிரண்டாவ னென்ற குலோத்துங்க சோழன் முதலாவனும், கி. பி. 1127-ஆம் யாண்டு அரசுரிமை யெய்திய குலோத்துங்கசோழ னிரண்டாவனு மென்ற சரசர் கூறப்பட்டுளர்; அவர்தமுட் குலோத்துங்க சோழன் முதலாவனதுகாலமே நமது கம்பர்தங்காலமுமே யாமென்பது பலர்க்கு மொப்ப முடிந்ததாம்; ஆகவே கம்பரது காலம் பதினோரா நூற்றாண்டின் பிற்பகுதி யென்பது தானேபோதரும்; இதனைத் தென்னிந்திய சிலாசாதன வாராய்ச்சிப் பத்திரிகையின் நான்காவது சம்புடத்தில் 205-ஆம் பக்கத்தின் கண்ணுங் காண்கவென்பாராயினார். இனிக் ‡ கால்ட்வெல்துரை கூறுமாறு கம்பர்காலம் குலோத்துங்க சோழனிரண்டாவன் காலமெனிற் படுமிழுக்கென்னை யென்று கூறுவரின்னொருசாரார். இவையாவற்றினும் நடுவட் கூறியோ கூற்றே வற்புடைத்தாம். என்னை? "எண்ணிய சகாத்த மெண்ணூற்றேழன் மேல்" என்பது இடையிற் சேர்க்கப்பட்ட சொருகுகவியேயா மென்பது, கம்பர் காலத்திருந்த வரசன் விசயாலய னென்பவனன்றிக் குலோத்துங்கனென்பதனுன், விளங்கும். இப்பாடலிற் குறித்த காலத்துப்பட்டமெய்தியவன் விசயாலயனேயா மென்பது சிலாசாதனவாராய்ச்சியினாற் பெற்றும். இனிக் கம்பர்காலம் கால்ட்வெல்துரை வரையுமாறு கொள்ளத்தக்கதன் றென்பதுஞ் சிறிது

† The Indian Antiquary, Pages (296-299,) October 1894.
‡ Bishop Caldwell.

தெரிப்பாம். கம்பரொட்டக் கூத்தரது காலங்களிற் சோழ ராசனது தலைநகராக உறந்தை தஞ்சைகளே கூறப்படுவன வாமன்றி அவற்றினின்றும் விலகி அரசனது வாசத்தா னங் காஞ்சியாயிற்றென்பது கூறப்படாமையானும் குலோத் துங்க சோழனிரண்டாவனிருந்தரசாண்டது காஞ்சியே யா தலானும் பிறவாற்றானும் அது புரையுடைத்தென்பது. கம் பர் ஒட்டக்கூத்தர் புகழேந்திப்புலவர் ஆகிய இம்மூவரு மொரே காலத்தினராகவே புகழேந்தியாரது காலம் கி. பி. பதினோராம் நூற்றாண்டின் பிற்பகுதியேயாமென்பது தேற்றம். இனியாம் மேற்கூறிப்போந்த புகழேந்தியாரது வரலாற்றுள் இவருக்கும் ஔவையாருக்குஞ் சில சம்பாஷணை நிகழ்ந் தனவாக வருதலின் ஔவையாரு மிவர் காலத்தினரேயோ வெனின்: அற்றன்று, ஔவையார் திருவள்ளுவரது உடன் பிறந்தாராதலானும்,ஔவையாருந் திருவள்ளுவருங் கடைச் சங்கமிருந்த காலத்திருந்தவராதலானும், கடைச்சங்கத் தார்காலம் புகழேந்திப்புலவர் காலத்திற்குப் பன்னூற் றாண்டுகட்கு முற்பட்டதாதலானும், இவர் காலத்திருந்த ஔவை பிரசித்திபெற்ற அந்த ஔவையாரல்லள்; ஔவை யென்பது முதியதவப் பெண்ணிற்கும் பேராமாதலின் அத் தகைய தவமுதியோள் யாரோடாயினும் புகழேந்திப் புல வர் சம்பாஷித்திருக்கவேண்டு மென்க. அற்றேல், ஔவை யார் அதிகமா னெடுமானஞ்சி யென்னும் அரசனிட மிருந்து அமிழ்தமயமானதொரு நெல்லியங்கனியைப் பெற் றுண்டமை பற்றி நெடுங்காலஞ் சீவித்திருந்தன ரெனப் புறநானூறு, சிறுபாணாற்றுப்படை, திருக்குறள் பரிமே லழகருரை முதலியன வெல்லாம் முழங்கா நிற்றலிற் கடைச்சங்கத்தார் காலத்து ஔவையாரும் புகழேந்தியார் காலத்து ஔவையாரும் ஒருவரே யெனக் கோடலியலா தோ வெனின்: நன்று கூறினாய்! மக்கட்கு விதித்த நூறு

வயதினும் நெல்லிக்கனி யுண்டமையாற் சிறிது அதிகமாக வாழ்ந்திருந்தன ரென்று கொள்ளல் கூடுமேயன்றிக் கி. பி. முதனூற்றாண்டினிருந்த ஔவையார் கி. பி. பதினோரா நூற்றாண்டினிறுதிகாறு மிருந்தன ரென்று கூறப்புகுதல் பண்டிதர் குழூஉவிற் பழியுண்டாழியுமென்க. இன்னுமிதன் விவரம் விரிப்பிற் பெருகும்.

இவரது சமயம் சைவ மென்றொரு சாரார் கூறுகிற்ப, மற்றொரு சாரார் வைணவ மென்பர். இன்னொரு சாரார் இவர் அரனையும் மரியையுமொப்ப நினைக்கும் அத்துவைத சமயத்தினரெனக் கூறுவர். இவர் தமது நளவெண்பா விற் கூறும் பாயிரத்துக் கடவுள் வாழ்த்துச் செய்யுட்களை யும், காண்டந்தோறும் முதற்கட்கூறும் காப்புச் செய்யுட் களையும், அவை தம்முள் திருமால் துதிகளை யெல்லாம் முன்னர்ப் பெய்திருத்தலையும், சுயம்வர காண்டத்து 47-ஆஞ்செய்யுளையும், கலிதொடர் காண்டத்து 33-ஆஞ்செய் யுளையும், கலிநீங்கு காண்டத்து 71-ஆஞ்செய்யுளையும், திருநெய்த்தானத்துச் சிவபெருமானைப் பாடியபோது சிவ பெருமானெனச்சுட்டாது நெய்த்தானத்தானெனப் பொதுப் படக்கூறியும், குறுங்குடித் திருமாலைப் பாடியபோது விசேடப்பற்றுக் காட்டுமாற்றலுள்ள சொற்களை யுபயோகித் தும். பாடியிருத்தலையும், தொண்டைமண்டல சதகமுடை யார் இவரைக் கூறுமிடத்து "மாலார்களந்தைப் புகழேந்தி யும்" எனக்கூறியிருத்தலையு முற்று நோக்குமிடத்து இவர் சிவ நிந்தைசெய்யாத வைணவரெனலேற்புடைத்தா மென் பது. சிவநிந்தை செய்யாத வைணவரிலராலோ வெனின்; அற்றன்று, சிவநிந்தை செய்யாத வைணவர் சிலரை யிக்கா லத்தும் யாம் கண்கூடாகக் காண்கின்றுமாக மதவாத மிகுந் திலா வக்காலத்திற் காண்டற்கென்னை யென விடுக்க.

அன்றியுமவர் அத்தகையராயிருப்பிற் சிவத்துதி செய்யவே மாட்டாரென்க.

இஃதிவ்வணமிருப்பச் சிலர் நம் புகழேந்திப் புலவர் வைணவருள் வைணவராயிருந்தமை பற்றிச் சைவனாய பாண்டியன் அவரைத் தன்மகட்குத் தானளித்த சீதனவரிசைகளுடன் அனுப்பி விட்டனன்; அல்லாக்கால் அத்தகைய சிறந்த பாவலரை விட்டுப்பிரிதலை விரும்ப மாட்டானென்றும், ஒட்டக்கூத்தப் புலவருஞ் சோழராசனுஞ் சைவர்களாயினமையானும், அவ்வொட்டக்கூத்தரோடிவர் முரணினமையானும், இவர் காவற் சிறையகத்திருந்தனரென்றும், இவரது வைணவவியல்பே யிவரைச் சோழராசனிடத்தி னின்றும் பிரித்துச் சந்திரன் சுவர்க்கியினிடத்துய்த்ததென்றும், அன்றே லிவரைச் சோழனுங் கைவிட்டிருக்கமாட்டா னென்றும், தம்மைச் சிலகாலம் ஆதரித்த பாண்டிய சோழராசர்களை மகிழ்விக்குமாறுந் தம்மோடெதுகாறும் பகைத்திறம் பூண்டிருந்த ஒட்டக்கூத்தர் சமய வேறுபட்டா லேதேனுங் குறை கூறுதிருக்குமாறும் உன்னியே தமது நளவெண்பாவிற் சிவத்துதிகளை யிடையே செறித்தன ரென்றுங் கூறுகிற்பர். இதனானே நம் புகழேந்தியார் பட்டபாட்டிற்கெல்லாங் காரணம் அவரது சமய வேறுபாடே யென்பது போதருமாதலின் அது பொருந்துமாறன் றென்பதுணர்க.

இனி யிவர்பட்ட பாட்டிற்குக் காரணமிவரது குணனே யென்க. இவர் சிறிது முனவெகுளியுடையரே யன்றிப் பிறரியல்பறிந்து அவ்வவற்றிற்குத்தக வொழுகுந் திறமில்லாதவருமாயிருந்தார். இவ்விரண்டுமே யிவர்க்கு ஒட்டக்கூத்தரது பகைமையினையும், அதன் மூலமாகச் சிறைச்சாலை வாழ்க்கையினையும், விளைத்தன. இவை பற்றி யன்றே

அவர் முரணூர்காவலன்பாற் சென்றதூஉ மென்க. தமிழிலக்கண விலக்கியக் கடற்கரை கண்ட புலவரொருவர் தாம் ஒரு நாட்டுச் சமத்தான வித்துவானைப் பகைத்துக் கோடலாகாதென்ற சிறு விஷயத்தை யறிந்து கொள்ளா மற்போனது மிகவும் பரிதபிக்கத்தக்கதே.

இதுகிடக்க. இந்நூல் அரிச்சந்திரன், கார்த்தவீரியார்ச்சுனன், புருகுற்சன், புரூரவன், முசுகுந்தன் என்னுஞ் சக்ரவர்த்திகளோடு உடனெண்ணப் பெற்றவனும் * முதலெழுவள்ளல்களு ளொருவனுமாகிய நளமகாராசனது கதையைப்பற்றிச் சொல்லுவதாம். நளவெண்பாவென்னுந் தொடர் நளனைப்பற்றிய வெண்பாவினாலாகிய நூலெனப் பொருள்படுதலின் அடையடுத்த கருவியாகு பெயர்க் காரணக்குறியாமென்க. இந்நளசரித்திரம் வடமொழி மாபாரதத்து ஆரணிய பருவத்தின்கண் 52-ஆம் அத்தியாயம்முதல் 80-ஆம் அத்தியாயங்காறும் விரிவாகக் கூறப்பட்டுளது. அதனை, 'நளோபாக்கியான பருவம்' என்ப வடநூலார். அஃதேயித்தமிழ் நளவெண்பாவினுக்கு முதனூலாம். பிருஹதச்வரென்னும் முனிவர் யுதிட்டிரனுக்கு இந்நளன் வரலாற்றைக்கூறினரென்று வியாதபாரதத்தின்கட்கூறியிருப்பவும், அதற்குமாறாக இந்நூலின்கண் வியாத முனிவரே கூறினரெனச் சொல்லப்பட்டிருத்தல் காண்க. இவ்வாறே வில்லிபுத்தூராருந் தமது பாரதத்தின்கண் நளன் கதையை வியாதர் பாண்டவர்க் கெடுத்துரைத்தனரென்று கூறாநிற்பர். இந்நள சரிதத்தையே அதிவீரராம பாண்டியன் நைடதமெனப் பெயரிட்டு விருத்தயாப்பினாற் செய்துளன். அஃதிந் நளவெண்பாவிற்குப் பிற்பட்ட நூலென்பது மலையிலக்கே. இனி நைடதங் கலித்

* குமுணன், சகரன், சகாரன், செம்பியன், துந்துமாரி, நிருதி, நளன்

துறை யெனவு மொருநூலுளது. அஃதத்துணைச் சிறப்பினதன்று.

இந்நூல் பாயிரம், சுயம்வரகாண்டம், கலிதொடர் காண்டம், கலிநீங்கு காண்டம் என்னும் நான்கு பகுதியின தாம். இப்பகுதிகளு ளொவ்வொன்றனையும் பற்றிச் சிறிது எடுத்து விரித்துரைப்பான் புக்கனம் :—

பாயிரம் : இதன்கண் முதலிரண்டு வெண்பாக்களும் பின் மடக்கினவாமாறுகாண்க. (†) என்னுங் குறியிடப் பெற்றுச் சுப்பிரமணியர்வாழ்த்தாகக் கூறப்பட்டுள பாடல் இரும்பல் காஞ்சி யென்னுஞ் சங்கச் செய்யுளின்கட் காணப் படுகின்றது. அந்நூலினின்று மிது மேற்கோளாக எடுத் துக்கொள்ளப்பட்டதுபோலும். எமக்குக் கிடைத்த கை யெழுத்துப் பிரதிதோறு மிப்பாவினைக் கண்டமையி னிஃ திடையிற் பிறராற் சொருகப்பட்ட கவியாமோ வென்றை யுறற்கிடனின்று.

சுயம்வரகாண்டம் : பஞ்சபாண்டவர் வனவாசஞ் செய் யத் தொடங்குழி, விசயன் சிவபெருமானைக் குறித்துத் தவஞ்செய்வான் கைலையங்கிரி செல்லாநிற்ப, ஏனைய நால் வரும் திரௌபதியொடும் மிகவும் மனவருத்த முற்றிருந்த னர் ; அப்போழ்தத்து வேதவியாதர் ஆண்டெழுந்தரு ளலும் அவரைத் தருமர் முறைப்படி வணங்கி, 'இவ்வுல கின்கட் சூதாடி யரசிழந்து வனத்துப் போந்துழலுற்றார் எம்மைத் தவிர்த்து வேறெவரு முளரோ? சொன்மின்' என வருந்திக்கேட்ப, அவர்தமைச் சமாதானப்படுத்துவான் கருதி யிந்நளன் கதையை வியாதர் கூறினரென்பதே நூல் வரலாறாமாறுகாண்க. இப்பரதகண்டத்தில் * நிடததேயத்

* Khandesh.

தில் மாவிந்த நகரின்க ணரசாண்டுவந்த நளமகாராசனும், † விதர்ப்பதேயத்திற் குண்டினபுரத்தின்கணிருந்து அரசாண்ட வீமராசன்றன் மகள் தமயந்தியும், ஒரு தெய்வலோகத்து அன்னப் புள்ளினாலும் ஏனையோராலு மொருவர் மற்றொருவருடைய கட்டழகு நற்குண நற்செய்கைகளைக் கேள்வியுற்று ஒருவர் மேலொருவர் காதல்கொண்டிருந்தனர். உடனே வீமராசன் றன்மகட்குச் சுயம்வரமொன் றேற்படுத்தலும், அதன்பொருட்டுப்போந்த இந்திரன், அக்கினி, இயமன், வருணனென்னுந் தேவர்கள் நால்வரும் நளனையே தமயந்தியினிடந் தூதனுப்பி வேண்டியும், அவள் நளனையன்றிப் பின்னெவனையும் மணஞ்செய்து கோடற்குடன்பட்டிலள்; பின்னர்த்தங்கள் வேண்டுகோளின்படி தூதுசென்ற நளனுக்குப் பல்வகைய வரங்களையும் அந்நால்வரும் மகிழ்ச்சியோடுங் கொடுத்து அந்நளனது வடிவினையே தாங்களும் பூண்டு சுயம்வர மண்டபத்திற்கு வந்தனர் ; அங்ஙன் தமயந்தி தனக்குத் தோழியாய்ப் போந்துநின்ற நாமகளது வார்த்தையானும் வேறுசில குறிப்புக்களானும் மெய்ந்நளன் இன்ன னென்றுணர்ந்து அவனுக்கே மன்றலந்தார் சூட்டினள்; அதன்பின்னர்ச் சுயம்வரங் கருதிப் போந்துகொண்டிருந்த கலிபுருடன் முன்னரே சுயம்வரம் நடந்துவிட்ட செய்தியையும், அதன்கண் தமயந்தி, இந்திரன் முதலிய தேவர்களையும் மதியாது ஒரு மானுடனாகிய நளனைத் தன்றலைவனாக்கொண்ட செய்தியையும், நடுவழியில் இந்திராதியரானறிந்து வருத்தமும் வெகுளியும் மேவித் தனதியற்கைத் தீக்குணத்தினாலும், நளதமயந்தியரது விதிவயத்தினாலும், தான் அவர்களை மிகுதியும் வருத்திப் பிரித்து ஆட்டி அலைக்கழிப்பதாகச் சபதஞ் செய்தனன்; கலியாணம் நிறைவேறியபின்றைத் தன்னகர்க்குத் திரும்பிப்போந்த நளன்

† Berar.

பசித்தன் றம்ம பெருந்தகை யூரே,
மனையுறை குரீஇக் கறையணற் சேவல்
பாணர் நரம்பின் சுகிரொடு வயமான்
குரற்செய் பீலியின் இழைத்த குடம்பைப்
பெருஞ்செய் நெல்லின் அரிசி யார்ந்துதன்
புன்புறப் பெடையொடு வதியும்
யாணர்த் தாகும் வேந்துவிழு முறினே.

—புறநானூறு, ௩௧௮.

அரசனுக்கு ஒரு துன்பம் வந்தால்; ஊர் முழுதும் உண்ணுமல் பசியோடு இருக்குமாம். அரசனுக்கும் குடிமக்களுக்கும் இவ்வாறன்றோ ஒற்றுமை இருக்கவேண்டும்! கறி சமைப்பதற்குப் பறித்த கீரை அப்படியே கிடந்து வாடும்; வெளியிலிருந்து கொண்டுவந்த விறகு அடுக்களைக்குச் செல்லாமல் அப்படியே முற்றத்திற் கிடந்து உலர்ந்து முறியும். மயில்போன்ற மென்மையும் அழகு நிறமுமுடைய இல்லக் கிழத்தியரும் வேந்தனுக்கு வந்த இன்னலை நினைந்து, உண்ண மனங்கொள்ளார். இப்படி ஊரே பசித்துக் கிடக்குமாம். என்ன வியப்பு!

ஆனுல், ஊரில் வளத்துக்கு ஒன்றுங் குறைவில்லை. அவ்வப்போதும் புது வருவாய் உடையதுதான். வேந்தன் துயரை உணரும் குடிமக்கள் தாம் வருத்தத்தாற் பட்டினி. மற்று, மனையில் உறையும் குருவிகள், பாணர்களின் வகிர்ந்த யாழ் நரம்புகளைப்போலவும் சிங்கத்தின் பிணைப்புற்ற பிடரிமயிரைப் போலவும் தாம் இழைத்த கூட்டினுள்ளே அகன்ற கழனிகளின் நெல்லரிசியைக் கவலையின்றிக் கொறித்துத் தின்றுகொண்டு தம் பெண் குருவிகளுடன் மகிழ்வோடு வதியும். அத்தகைய புதிய வரும்படி மிக்க ஊர்தான்.

இருந்தாலும் தம் உயிரன்ன அரசனுக்கு ஒரு துன்பம் என்றுல், அன்பிற் சிறந்த குடிமக்கள் மனம் எவ்வாறு உண்டுடுத்து மகிழ முடியும்! அன்பு இங்ஙனமன்றோ உள்

சிய முதலிய யாவற்றையும் இழந்து மனைவி மக்களோடும் நகர்நீங்கி வனஞ்சென்று ஆண்டுப்போந்த வோரந்தணன் மூலமாகத் தன்மக்களை வீமராசனிடம் விடுத்தனன்; அதன் பின்னர் ஒரு கடுங்காட்டிற் செல்வுழிக் கலிபுருடன் பொன்மயமானதோ ரன்னப்புள்ளின் வடிவினிற் போந்து எதிர்ப்படக்கண்ட தமயந்தி அதனைப் பிடித்துக்கொடுக்குமாறு நளனை வேண்டலும், அவன் தங்களாடை யிரண்டனுளொன்றைத் தானுந் தன்மனைவியுமுடித்துக்கொண்டு மற்றொன்றை யவ்வன்னப்புள்ளின்மேல் வீசிப்பிடிக்க முயன்றவளவில், அம்மாயவன்னம் அவ்வாடையை யெடுத்துக்கொண்டு பறந்துசென்றது; பின்னர் அற்றைஞான்றிரவினில் மிக்கவிருளில் அவ்விருவரும் ஒற்றைத் துகிலினராய் ஒரு பாழ்மண்டபத்திற் சென்று படுத்துக்கொண்டனர்; 'இப்போழ்ததத்தி வளை ஈங்கே தனியின்விட்டுச்சென்றக்கால் இவள் எவ்வாறேனுந் தன்றாதைபாற்சென்று சேர்வள்' என்றதோர் கருத்துக்கொண்ட நளன், அளவயர்ந்துறங்கும் அமயம்பார்த்து அவட்குந் தனக்கு மொன்றாயிருந்த ஆடையை யறுப்பமெனெண்ணலும் கலிபுருடனொருவாளுருக்கொடு போந்தருகினிருந்தனன்; அதுகொண்டு நளன் ஆடையை யரிந்துவிட்டுப் பிரிந்து சென்றனன்; சென்றபின்னர்த் துயிலொழிந்தெழுந்த தமயந்தி பலவாறு புலம்பி நளனைத்தேடிச் செல்வுழி, ஒரு பெரும் பாம்பின் வாயினகப்பட்டு வாய்விடுத்தரற்றி ஆங்கனம்போந்த வொருவேடனென் எடுத்துவிடப்பெற்றுயிர் பிழைத்து நின்றாள்; உடனே தன்மீதாசைகொண்டு தழுவப்போந்த அவ்வேடனைத் தனது கற்புத்தீயினெரித்துப் பின்னர் வழிப்போகுமொரு வணிகனுதவியாற் சேதிநகர்சென்று அவ்வயின் அரசியின்பாற் சின்னாட்டங்கியிருந்தனள்; அங்ஙனமிருப்புழி யொருநாள் நளதமயந்தி

(பொ - ரை.) கடல் நீரலைமேற் றோய்ந்து ஓடுவனவும், எட்டுத்திசையையும் சூழ்ந்து வருவனவும், உலகத்தைச் சூழ்ந்த சக்கரவாள கிரியைப் போல்வனவும், அசுரர் கூட்டத்தைப் பிளப்பனவும் ஏழ் இனமான மலைகளை முட்டுவனவும், கருமுற்றிய மேகத்தைப் பிளப்பனவும், உருளையைக் கொண்டு சந்திரனைச் சினப்பனவும் ஆகிய பேரொளியுடைய வயிரத்தாற் சமைக்கப் பட்ட தேர்கள் நூறு கோடியும், காற்றின் போரினால் அழிக்கப் படாதனவும், பருவத் தீயாற் பற்றப்படாதனவும், கடலுஞ் சக்கரங்கள் பதியாதனவும், உலகம் அழிய இடிக்கும் இடிபோல முழங்குவனவும், வேகத்தால் எழுகடலுங் கலங்கப் பாயும் பரிமாக்கள் பூணப் பட்டனவும் பிரமனால் முடி தாழ்த்தி வணங்கப் பட்டனவும் ஆகிய பொன்னாற் சமைத்த தேர்கள் நூறுகோடியும், யுக முடிவில் உலகினை யழிக்கும் வடவைத் தீயைப்போல் சூரிய னுக்குக் குளிர்ச்சியைத் தருவனவும், குளிர்ந்த பதினாறு கலையுடைய சந்திரனையும் பற்றிக் கருகும்படி விரிந்த நிலா வுடையனவும், சடைமுடியிற் பாய்ந்த கங்கை நீரையுடைய கடவுள் திருக்கையிலுள்ள வெய்ய நெருப்புடன் பகை கொள்வனவும், ஒலியுடைய சேனைகள் நீங்காதனவும் ஆகிய முத்தாற் சமைக்கப் பட்ட தேர்கள் நூறு கோடியும் திருமால் வரவுடன் கூடி வந்தன.

(வி - ம்.) திரை - அலை. தோய்வன எனவே தோய்ந்து செல்வன எனப்பட்டது. நீர்மேலோடுந் தேர் என்க. சூழ்வரு சிலை - சுற்றிய மலை. இது சக்கரவாள மலையை யுணர்த்தும். பூமியைச் சுற்றி (வளைந்து) இருப்பதால். அம் மலையைப்போல் உருவமுடைய தேர் எனக் கொள்க. போழ்வன - பிளப்பன. திருமாலுக்குப் பகைவர் அசுரர் ஆதலால் அவரைத் தொலைக்குந் தேர் எனக் கூறியதாயிற்று. வரையைப் பாய்தல் என்பது பாகர் விரைந்து செலுத்தின் மலையை முட்டித் திரும்பும் தேர். மலையை முட்டினும் குலையாத தேர் எனச் சிறப்புத் தோன்றிற்று. சூல் - கரு. முதிர்மழை - முற்றிய மேகம். கொடு முடியால் மேகத்தைப் பிளக்கும் தேர் என உயர்வைச் சிறப்பித்தது இது. கால் - உருளை. உருளை வட்டம் நிலாவட்டம் போலத் தோன்றுவதால் அந்நிலாவை வருந்தும்படி செய்யும் என்பது. தேர்க்கால் வட்டத்தைப் போல நாம் வட்டமாகத் தோன்றிலமே என எண்ணி மதி வருந்தும் என்பது கருத்து. பவனப் போர் - காற்று வந்து மோதுவது. பவனம் - காற்று. காற்று மோதியுடைக்கப்படாதது. பருவத்தீ - ஊழிக்காலத்துத் தோன்றும் நெருப்பு. அந் நெருப்பாலும் சுடப்படாதது. பரவை - கடல். கடலிற் கால் குளியாதன என்றது கடல் நீர் மேலும் செல்லும் என்பதாம். பாய் பரிமாவின என்றது; வலிய குதிரைகள் பூட்டிய தேர் என்பதை யுணர்த்தியது. திருமால் ஏறிவரும் தேர் ஆதலின் பிரமன் தன் தந்தை யேறுந் தேர் என்று முடிதாழ்த்தி வணங்குவன் என்பது தோன்ற "கமலத்தோன் முடி தாழ்வன" என்றார். கனலி - சூரியன். கனலிக்கே குளிர் கூர்வன என்றது முத்தின் குளிர்ச்சியாற் சூரியனும் குளிர் மிகுதி யுடையவன் என்பது கருத்து. மதி கருகுவது மாயபூ பனிக்குக் கருகுவது போல வாடுவதைக் குறித்தது. வானவர் என்பது சடையிற் பாய் புனல்' என்ற அடைமொழியாற் சிவபெருமானைக் குறித்தது. அவர்

ளை வரவழைக்கத்தக்க தோருபாயமாக அவள் 'தமயந்திக் கிரண்டாஞ் சுயம்வரம் நடக்கின்றது' என்று இருதுபன்ன னிடங் கூறுமாறு புரோகிதற் காணையிட்டனள்; இடப் பெற்ற வேதியனும் அவள்பணித்தாங்கே யரசற்குரைத்த லும், இருதுபன்னன் 'இச்சுயம்வரத்தின்கண்ணுதல் யான் அவளை மணந்துகொள்வல்' என்றவாசை பிடர்பிடித்துந்தப் புறப்பட்டு வாகுகனாற் செலுத்தப்பட்ட தேரின்மீதேறிக் குண்டினபுரஞ் சென்றனன்;செல்வுழி யிருதுபன்னன் தான றிந்துள 'அக்ஷயவிருதயம்' என்னும் வித்தையைப் பாகனுக் கறிவித்து அவனறிந்துள 'அசுவவிருதயம்' என்னும் வித் தையைத் தானறிந்துகொண்டனன்; அக்கணமே கலி நளனை விட்டு நீங்கினன்; அப்பாற் குண்டினபுரம்போந்த இருது பன்னனுடன் வந்த வாகுகனைத் தமயந்தி பல்வகையானு மாராய்ந்து அவனே தன்னருந்தலைவன் நளனென்று தேறி னாள்; அப்போழ்தத்து அப்பாகன், முன்னர்க் கார்க்கோடக னளித்த ஆடைகளிரண்டையு முடுததுக்கோடலும், அவன் றனது மெய்யுருவெய்தியிளிர்ந்து நின்றனன்; தேவர்கள் மலர்மழை பெய்தனர்; உடனே கலிபுருடனும் போந்து நளனுக்கு வேண்டிய வரங்கொடுத்துச் சென்றனன்; அதன் பினர் நளன் மனைவிமக்களொடும் மாவிந்த நகரமடைந்து மீண்டும் புட்கரனொடு சூதாடிவென்று தனது இராச்சிய முதலியவற்றைப் பெற்றுச் செங்கோல் செலுத்தி யினிது வாழ்ந்தனனென்பதே யிக்காண்டக் கதையாம். இதன்கண் கடற்கரையருகிற் செல்லுறாஉம் நளன் உளமழிந்து கையற் றுப் புள்ளொடும் ஞெண்டொடும் பூவொடுங் கடலொடும் புலம்பும் பாடல்கள் மிகச்செவ்வி வாய்ந்தனவாமாறுணர்க.

இந்நூல் பெருங்காப்பியத்தி னியல்களுட் பெரும்பால னபொருந்தி நிற்றலுணர்க. தெய்வ வணக்க மங்களத்தை

முதற்கட்பெற்று, அறம்பொருளின்பங்களைப்பற்றி யாங்காங் குரைத்துத் தன்னகரில்லாத் தலைவனுடைய நளனையுடைத்தாய், நாடு நகர் கடல் சந்திர சூரியர் உதயாத்தமன வருணனைகள் செறிந்து, தமயந்தி சுயம்வரமாகிய நன்மணம் புணர்தலும் நளன்மீட்டு மிராச்சியம் பெற்றுப் பட்டாபிடேகஞ் செய்து கோடலாற் பொன்முடிகவித்தலு முடைத்தாய்ப், பொழில் விளையாட்டுப்புனல் விளையாட்டுக்களும் மகப்பேறு கல்வியிற் களித்தல் புலவியிற்புலத்தல்களு மாங்காங்கேகொண்டு, தமயந்திபால் நளன்றாது சென்றமையிற் றாதுமுடையதாய்க் காண்டமென்னும் பாகுபாடுபெற்றுச் சிங்காரஞ் சோகஞ் முதலிய சுவைகளும் அவையிற்றை விளக்குறுங் கருத்துக் களும் மேவி வெண்பாவென்னு மொருதிறப்பாட்டினில் யாக் கப்பட்டு நிற்றலிற் பெருங்காப்பியமே யென்பதற்கெட்டுணை யும் ஐயப்பாடில்லை யெனினும் சூளாமணி, நீலகேசி, நைடத மாதிய சிறுகாப்பியங்கள் பெருங்காப்பியத்தி னிலக்கணங்க ளுடையனவாகவும் அவற்றைப் பெருங்காப்பியங்க ளென் னாது சிறுகாப்பியங்களென்றே யுயர்ந்தோர் வழங்கிவருத லான் அவைபோலவே யிந்நள வெண்பாவினையுஞ் சிறுகாப் பியமென்று கூறுதல் சிறப்புடைத்தாமென்க.

நம் புகழேந்திப் புலவர் தமக்குப் பல்வகைச் செல்வ முங் கொடுத்து ஆதரித்தவனும், தாம் நளவெண்பாப் பாடு தற்கு ஏவும் வினைமுதலாய் நின்றவனுமாகிய சந்திரன் சுவர்க்கியென்னுஞ் சிற்றரசனை யிந்நூலின் சுயம்வரகாண் டத்தில் 17, 57 - ஆம் பாடல்களினும், கலிதொடர்காண் டத்தில் 109, 128 - ஆம் பாடல்களினும், கலி நீங்குகாண் டத்தில் 48-ஆம் பாடலினும்,புகழ்ந்துளர். 'இவ்வாறு பாலில் விடங்கலப்பதுபோலப் பெரியநூல்களி னிடையிடையே ஒரு மனிதனைத் துதித்தல் தகுமோ? நர கவனம் நரக வன

மன்றோ?' என்று ஆட்சேபிப்பாருமுளர். இங்ஙனம் புகழ்ந் துரைத்த றகுதியன்றெனினும் மன்னவன் தமக்குச் செய்த நன்றியை மறவாது பாராட்டுதனிமித்தமாக வுபகார ஸ்மிரு தியாகப் பாடினரென்பதுபற்றிக் கற்றோரெல்லா மேற்றுக் கொள்வாராயினர்; அதான்றியும் புனைவுளியாகிய பொருண் முகத்தால் அவன் பெயரை யெடுத்துரைத்தலின்றிப் புனை விலியாகிய உவமை முகத்தாற் கூறியிருக்கின்றனரென்பது முணர்க. இன்னுமிவ்வாறு தம்மை யாதரித்தவர்களைப் பற்றித் தமிழ்ப்புலவர்கள் தாம் செய்யும் நூல்களிற் புகழ்ந் துரைத்த லியற்கையாமென்பது, கம்பர் தமது இராமா யணத்தின்கண் திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப முதலியாரையும, வில்லிபுத்தூராழ்வார் தமது பாரதத்தின் கண் வக்கபாகை நகரத்து வரபதியாட் கொண்டானையும், மண்டல புருடர் தமது சூடாமணி நிகண்டின்கட் கிருஷ்ண தேவராயனையும் புகழ்ந்து கூறியிருக்குமாற்றாற் றெற்றெ னப்புலனாம்.

தமயந்தி சுயம்வரங் கருதிப்போந்த அரசர்களையெ டுத்துக் கூறுகின்றுழித் தமிழ்நாட்டு மூவேந்தரையும் முத ற்கெடுத்துச் சிறப்பித்துரைத்தலான் இந்நூலாசிரியர்க் குத் தேசாபிமானமும், கலிதொடர் காண்டத்து 133-ஆஞ் செய்யுளின்கண் "வண்டமிழ்வா ணர்ப்பிழைத்த வான்கு டியோ நீத்தழன்மீ, மண்டு கொடுஞ்சுரத்து" எனத்தமிழ்ப் புலவர்களது ஆற்றலைக்கூறுதலாற் பாஷாபிமானமு முண் டென்பது பெற்றாம்.

நளசரிதங் கேட்டவர்களைக் கலியுகத்தினுங் கலிபுரு டன் சேரமாட்டானென்றுரைக்குப பல்லோர்; இதனைக் கலிதொடர்காண்டத்து 78-ஆஞ் செய்யுளினும், நைடதத்தி

னும், வியாசபாரதத்தினுங்காண்க. நளதமயந்தியர்தஞ் சரித்திரங்கூறுமுகத்தான், இல்லறவாழ்க்கைக்குரிய வொழுக்கமும், பல வைதிகலௌகிக தன்மங்களும், வாய்மையின் மேன்மையுங் கற்பின் மகிமையுந் தலைவன்றலைவியரியல்புந் தூதிலக்கணமும் அன்னமச்சியலும் ஊழ்வினையுருத்து வந்தூட்டுமென்பதூஉஞ் செல்வஞ் சகடக்கால்போல் வருமென்பதூஉந் துன்பநேர்ந்துழியும் அறிவுடையோருளமுடையாரென்பதூஉஞ் சூதாட்ட மேதமயக்கு மென்பதூஉம் இவை போல்வன பிறவுங் கூறப்படுமாறு காண்க. இன்னுமிந்நளன் கதையை யுருவகமாகலே யெனக்கொண்டு பரமாத்ம நளன் முத்திக்குரிய சீவனெனவும், அன்னப்புள் காரணமின்றி நிகழுங் கடவுளருளெனவும், தமயந்தி தத்துவஞான மெனவும், மக்கள் சமதமகுணங்களெனவும், சூதாட்டம் விடயவாதனைத் தொடர்பெனவும், அமைச்சர் உறுதிகூறுந் துணைவரெனவும், புட்கரன் அவிவேகமெனவும், கலி மயக்கமெனவும், அரசிழவு முத்திப் பேற்றினரிமையிழ வெனவும், தமயந்தி பிரிவு தத்துவஞான நீக்கமெனவும், வனத்துறு துன்பம் பிரயத்துறு துன்பமெனவும், கார்க்கோடகன் பழவினை யெனவும், வேடன் குரோதமெனவும், நளன் வாகுகனாகி இருதுபன்னனிடத்து ஊழியஞ்செய்தல்இழிபிறப்பிறந்தோன்றி அப்பிறவித்துயர்நுகர்தலெனவும், தூதுசென்ற அந்தணன் திருவருளாற்றோன்றிய நல்லாசிரியனெனவும், தமயந்தியிரண்டாஞ் சுயம்வரச் செய்தி தத்துவ ஞானோபதேசமெனவும், குதிரைகள் வேதங்களெனவும், தேர் பிரணவமெனவும், தமயந்தியை யடைதல் தத்துவஞானப் பேறெனவும், இராச்சியப்பேறு முத்திப்பேறெனவு முய்த்துணர்ந்து, முத்தி நிலையையெய்தற்குரிய சீவன் காரணமின்றி நிகழாநிற்கு மிறை.

வன் றிருவருளாற் றத்துவ ஞானத்தினை யடைந்து அத னடியாகத் தோன்றுஞ் சமதம குணங்களைப்பெற்று, பின்னர் விடயவாதனைத் தொடர்பினாற் றானடைந்திருந்த நன்னிலையையுந் தத்துவ ஞானத்தையு மிழந்து கூற்றுவற் குடைந்து எரிவாய் நிரயத்திடுக்க ணுகர்ந்து பழவினை வயத்தனாயிழிபிறப்புற்றுப் பல்வகைத் துன்பங்களையு மநுபவித்து, திருவருளாற் றோன்றிய நல்லாசிரிய னுபதேச மொழியாற் பிரணவரதத்தினேறிச் சென்று குரோதங்க வர்ந்து கொண்ட தத்துவஞானத்தை மீட்டு மடைந்து முத்தியெய்திப் பேரின்பத்தை நுகர்கின்றன னென்னுந் தத்துவப்பொருள் கூறுவாரு முளர்.

இனி நளவெண்பாவின் செய்யுணடைச் சிறப்பினைப் பற்றிச் சிறிது கூறுவாம்.

இழுமெனு மருவியி னொழுகுறு மருவிபோற்
செய்யுட்க ளெல்லாஞ் செல்லுறூஉ மியல்புங்
கற்பனைச் செல்வமுஞ் சொற்பொரு ணயங்களும்
பொதுளிய பான்மையு மெதுகை மோனையி
னியமம் பிழையா நேர்மையும் பதின்குண
வியலொடு பலவணி யியைபு மிடக்க
ரடக்கிப் பாடு மழகுமெத் தகையரும்
படிக்க வினிக்கும் பண்பு மவ்வவ
வமய வுசிதமா வமைக்கு மாற்றலு
முள்ளுறை யுவமமு மொருங்கே தெரிக்குந்
தெள்ளிய தமிழ்ப்பாச் சீர்மை
பண்போத வார்நள வெண்பாவி னுண்டே.

இவை பற்றியன்றே,

"கேட்டாலு மின்பங் கிடைக்குங்கண் டார்கொண்ட கீர்த்தியொடு
பாட்டா லுயர்ந்த புகழேந்தி சொன்னபடி"

யெனப் படிக்காசுப்புலவர் கூறியதூஉ மென்க.

இன்னு மிந்நூற் சுயம்வரகாண்டத்து 41-ஆஞ் செய்யுளின்

"சேவல் குயிற்பெடைக்குப் பேசுஞ் சிறுகுரல்கேட்
டாவி யுருகி யழிந்திட்டான்"

என்றவடிகள் திருமங்கையாழ்வார் பாடிய திருநெடுந்தாண்டகத்தின் 7-ஆம் பாசுரத்தின்கண்

"செங்கால் மடப்புறவம் பேடைக்குப் பேசுஞ்
சிறுகுரலுக் குடலுருகிச் சிந்தித் தாங்கே"

யென்ற வடியினை யொக்குமாறும், 137-ஆஞ் செய்யுளின்கண் "ஆழி வடிம்பலம்ப நின்றானும்" என்று கூறுதலானே யிந்நூலுடையார் புறநானூறு, மதுரைக்காஞ்சி, சிலப்பதிகார முதலிய நூல்களிற் பயின்றிருக்குமாறும், கலிதொடர் காண்டத்து 114-ஆஞ் செய்யுளின்

"வான்முகிலு மின்னும் வறுநிலத்து வீழ்ந்ததுபோற்
றானுங் குழலுந் தனிவீழ்ந்தாள்"

என்றவடிகள், மணிமேகலையின்கண் ஒன்பதாவது பீடிகை கண்டு பிறப்புணர்ந்த காதையின்

"கொடிமின் முகிலொடு நிலஞ்சேர்ந்தென்ன
விறுநுசுப் பலச வெறுநிலஞ் சேர்ந்தாங்கு"

என்ற 6-7-ஆம் அடிகளை யியையுமாறும், 115-ஆஞ் செய்யுளாகிய

"தைய றுயர்க்குத் தரியாது தற்சிறகாங்
கையான் வயிறலைத்துக் காரிருள்வாய் —வெய்யோனை

வாவுபரித் தேரேறி வாவென் றழைப்பனபோற்
கூவினவே கோழிக் குலம்"

என்பது கம்பராமாயண வயோத்தியாகாண்டக் கைகேசி சூழ்வினைப் படலத்து 47-ஆஞ் செய்யுளாகிய

"எண்டருங்கடை சென்றயாம மியம்புகின்றன வேழையான்
வண்டுதங்கிய தொங்கன்மார்பன் மயங்கிவிம்மிய வாறெலாங்
கண்டுநெஞ்சு கலங்கியஞ்சிறை யானகாமர் துணைக்கரங்
கொண்டுதம்வயி றெற்றியெற்றி விளிப்பபோன்றன கோழியே"

என்பதனை யொக்குமாறும், கலிங்கு காண்டத்தின் 33-ஆஞ் செய்யுளாகிய

"பேர்வாய் வருவாய் புரண்டு விழுந்திரங்கி
நாவாய் குழற நடுங்குறுவாய்—தீவா
யரவசற்று மென்போல வார்கலியே மாதை
யிரவசற்றி வந்தாய்கொ லின்று"

என்றது சங்கத்துச் செய்யுளொன்றாகிய

"வருதி பெயர்தி வருந்துதி துஞ்சாய்
பொருதி புலம்புதி நீயுங்—கருதுங்காற்
பண்டினை யல்லையாற் பாழித்தோட் கோதையைக்
கண்டனையோ வாழி கடல்"

என்றதனையுறழுமாறு முய்த்துணர்க.

புகழேந்திப் புலவரென்னு மிந்நூலாசிரியரது பெயர் இவர்க்குக் கல்விநலன்பற்றி யெய்திய சீர்த்தி குறித்துக் கீர்த்திபெற்றவரென்னும் பொருளிற் போந்த காரணக்குறி பாமாறு காண்க. அற்றாக இவர்தம் இயற்பெயரின்ன தென்றெய்த்தலியலவில்லை.

இவர் பாடிய வேறு நூல்களுள் இரத்தினச்சுருக்கம் என்பது மகளிர்தங் குழுன் முதற்றாளீறாகவுள்ள வுறுப்புக்கட்கு உயர்மொழிப் புலவரா னுரைக்கப்படும் பல்வகைய வுவமைகளைத் தனித்தனியெடுத்து விதந்து காட்டுவதனொடு காவியங்களின் அறியத்தக்க வேறு சில விடயங்களையுந் தெரிக்குமொரு சிறு நூலாம். சூடாமணி நிகண்டின் பன்னிரண்டாந் தொகுதியின்கட் காணப்படுஞ் சில விடயங்களிதன்கண்ணுங் காணப்படும். இஃது எழுபது பாடல்களானியன்றது. சிலர் இவர் சிறையினிருந்துழி மகளிர்க்கென்று பாடிய அல்லியரசிமாலை, பவளக்கொடிமாலை, புலந்தரன் களவுமாலை முதலிய நூல்கள் இவர் கருதியாங்கே மாதர்களாற்றலுக்குந் தகுதிக்கு மேற்றவாறு மிகவும் எளிய நடையிலமைந்துள்ளன வென்பரேனும் அவையிற்றை யிவர் செய்த நூல்களெனக் கோடலரிதெனவே யுறுதிப்படுகின்றது. இன்னுமீண்டுக்கூறியனவன்றி யிவரொரு கலம்பகமுஞ் செய்துளரென்பது

> "காரார் களந்தைப் புகழேந்தி சொன்ன கலம்பகத்தி
> னேராது நையும் படியென்ற பாடலி னேரியர்கோன்
> சீராகச் செப்பிய நற்பாடல் கொண்டவன் செஞ்சியர்கோன்
> மாராபி ராமனங் கொற்றந்தை யூர்தொண்டை மண்டலமே"

யென்றதொண்டைமண்டலசதகச் செய்யுளாற்புலனாகின்றது.

இனி நளவெண்பாவி னிறுதிக்கண் வாழ்த்துச் செய்யுளாக

> "வாழ்க மலைநாடு வாழ்கவளச் சோணாடு
> வாழ்க வழுதி வளநாடே—வாழ்கவே
> முன்னீர்மை யோடு முதனீர்மை காத்தோம்பு
> நன்னீர் வயற்றொண்டை நாடு."

என்ற தொன்று எமக்குக் கிடைத்த பிரதிகளு ளொவ் வொன்றினுங் காணப்படாது சிற்சில வேட்டுப் பிரதிகளின் மட்டுமே காணப்பட்டமையின் நூலினுள்ளே சேர்த்து அச்சிடாது விடுத்தனம்.

இந்நூலாசிரியர் வெண்பாப் பாடுதற்கண் மிகவும் வல் லுநரென்பதை

"வெண்பாவிற் புகழேந்தி பரணிக்கோர்
சயங்கொண்டான் விருத்த மென்னு
மொண்பாவி லுயர்கம்பன் கோவையுலா
வந்தாதிக் கொட்டக் கூத்தன்
கண்பாய கலம்பகத்திற் கிரட்டையர்கள்
வசைபாடக் காள மேகம்
பண்பாய பகர்சந்தம் படிக்காச
லாதொருவற் பகரொணாதே"

என்ற பலபட்டடைச் சொக்கநாதப்புலவர் சிறப்புக் கவியினு ணுணர்க.

இதற்கு முன்னர் இந்நூல் பலரானு மச்சிடப்பட்டிருப் பினும் எம்பாற் கல்விபயிலுநராஉம் இயற்றமிழ்மாணவர் எம்மை யொன்றச்சிடுமாறு பன்முறையும் வேண்டிக் கொண்டமையின், அவர்தம் வேண்டுகோட் கிணங்கிப் பல பிரதி ரூபங்கள் தேடிக்கொண்டு கரலிகிதவரூஉக்களைந்து எம்மா லியன்றவளவு மூலபாடத்தை யிருந்தவாறே செப் பஞ்செய்து செய்யுண்முதற்குறிப்பகராதி யொன்றிறுதியிற் சேர்த்து அச்சிட்டிருக்கின்றனம். இந் நன்முயற்சியின்

கண் எய்மைத் தூண்டுபு கடைபோகுமட்டுந் தோன்றாத் துணையா யுதவிபுரிந்துநின்ற எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளாய நடராசப் பெருமானை மனமொழி மெய்களிற் றொழுகின்றனம்.

வி. கோ. சூ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# நளவெண்பா

## பாயிரம்

### கடவுள் வாழ்த்து

விநாயகக் கடவுள்.

நேரிசைவெண்பா.

நேசரிதங் கூர நிலவலயந் தாங்குநளன்
மாசரிதங் கூற வருந்துணையா — மீசன்
கரியா னனத்தான் கருதுபுகழ் பூண்ட
கரியா னனத்தான் கழல். (க)

[மற்றொருபாடம்.]

சடகோபர்.

நேசரிதங் கூர நிலவலயந் தாங்குநளன்
மாசரிதங் கூற வருந்துணையாப் — பேசரிய
மாமகிழ்மா றன்புகழாம் வண்டமிழ்வே தம்விரித்த
மாமகிழ்மா றன்றாண் மலர். (உ)

## திருமால்.

ஆதித் தனிக்கோல மானா னடியவற்காச்
சோதித் திருத்தூணிற் றோன்றினான்—வேதத்தின்
முன்னின்றான் வேழ முதலே யெனவழைப்ப
வென்னென்றா னெங்கட் கிறை. (௩)

## சிவபெருமான்

கலாப * மயிலிருந்த பாகத்தார் கங்கை
யுலாவு சடைமே லுறையு—நிலாவை
வழியவார்த் தாலன்ன மாநீற்றார் நாகங்
கழியவார்த் தார்நமக்கோர் காப்பு. (௪)

## சுப்பிரமணியர்

†நீல நெடுங்கொண்மூ நெற்றி நிழலூறிக்
காலை யிருள்சீக்குங் காய்கதிர்போற்—சோலை
மணித்தோகை மேற்றோன்றி மாக்கடற்சூர் வென்றோ
னணிச்சே வடியெம் மரண். (௫)

---

## அவையடக்கம்.

வெந்தறுகண் வேழத்தை வேரிக் கமலத்தின்
றந்துவினார் கட்டச் சமைவதொக்கும்—பைந்தொடையிற்
றேன்பாடுந் தார்நளன்றன் றெய்வத் திருக்கதையை
யான்பாட லுற்ற விது. (௬)

## ஆக்கியோன் பெயர்

பாரார் விடத பதிநளன்சீர் வெண்பாவாற்
பேரார் புகழேந்தி பேசினான்—றாரார்
செழியனையுஞ் சென்னியையுஞ் சேரத் திறைகொண்
மொழியின் சுவையே முதிர்ந்து. (௭)

பாயிர முற்றிற்று.

---

* "மயிலுகந்த" வென்பதூஉம் பாடம்.

# நூல்

## முதலாவது

## சுயம்வர காண்டம்.

பாண்டவரின் முன்றோன்றல் பார்முழுதுந் தோற்றொருநா
ளாண்டகையே தூதுவனாய்ச் சென்றவனி—வேண்ட
மறுத்தா னிருந்தானே மண்ணொடும்போய் மாளப்
பொறுத்தா னிருந்தான் புலர்ந்து. (௧)

நாட்டின்கண் வாழ்வைத் துறந்துபோய் நான்மறையோ
ரீட்டங்கள் சூழ விருந்தானைக்—காட்டிற்
பெருந்தகையைக் கண்டார்கள் பேரெழிற்றோள் வேந்தர்
வருந்தகைய ரெல்லாரும் வந்து. (௨)

கோற்றவேற் றானைக் குருநாடன் பாலணைந்தா
னெற்றுநீர் ஞாலத் திருணீங்க—முற்றும்
வழிமுறையே வந்த மறையெல்லாந் தந்தான்
மொழிமுறையே கோத்த முனி. (௩)

மறைமுதல்வ நீயிங்கே வந்தருளப் பெற்றேன்
பிறவிப் பெருந்துயர மெல்லா—மறவே
பிழைத்தேன்யா னென்றானப் பேராழி யானை
யழைத்தேவல் கொண்ட வரசு. (௪)

மெய்த்திருவந் துற்றாலும் வெந்துயர்வந் துற்றாலு
மொத்திருக்கு முள்ளத் துரவோனே—சித்தம்
வருந்தியவா வென்னென்றான் மாமறையா னுள்ளந்
திருந்தியவா மெய்த்தவத்தோன் றேர்ந்து. (௫)

அப்பொற் கயிலைக்கே யாகத் தரவணிவார்
தம்பொற் படைக்குத் தமையனை — வெம்பிணைமுன்
போக்கினே னென்றுரைத்தான் பூதலத்து மீதலத்தும்
வாக்கினே ரில்லாத மன். (௬)

காண்டா வனத்தீக் கடவுளுணக் கைக்கணையா
னீண்ட முகிறடுத்து நின்றாற்கு — மீண்டமரர்
தாமிரண்டு நோவத் தனித்தனியே யோடியநாட்
டோளிரண்டு மன்றோ துணை. (௭)

போரரசு மக்கள் பெருந்திருவுங் கைவிட்டுச்
சேரிய வெங்கானஞ் சேர்தற்குக் — காரணந்தான்
யாதோவப் பாவென்றா னென்றுந்தன் வெண்குடைக்கீழ்த்
தீதோவப் பார்காத்த சேய். (௮)

கேடில் விழுச்செல்வங் கேடெய்தச் சூதாட
லேடவிழ்தார் மன்னர்க் கியல்போகான் — வாடிக்
கலங்கலைநீ யென்றுரைத்தான் காமருவு நாடற்
கிலங்கலைநூன் மார்ப னெடுத்து. (௯)

கண்ணிழந்து மாயக் கவறுடிக் காவலர்தா
மண்ணிழந்து போந்து வனநண்ணி — விண்ணிழந்த
மின்போலு நூன்மார்ப மேதினியில் வேறுண்டோ
வென்போ லுழந்தா ரிடர். (௧௦)

சேமவேன் மன்னனுக்குச் செப்புவான் செந்தனிக்கோ
னேமவேற் காளை நளனென்பான் — யாமத்
தொலியாழி வைய மொருங்கிழப்பப் பண்டு
கலியான் விளைந்த கதை. (௧௧)

இ-ள் :—மேற் கூறப்பட்டவற்றுள் வினைவேறுபடும் பலபொருளொருசொல் பொருள் தெரியுங்காலத்து வேறுபட்ட வினையினானும், இனத்தினானும், சார்பினானும் தெளியத் தோன்றும். எ-று.

உ-ம் :—மா காய்த்தது ; வேங்கை பூத்தது என்றவழி மரம் என்பது அறியப்பட்டது. மா ஓடிற்று ; வேங்கை பாய்ந்தது என்றவழி விலங்கு என்பது அறியப்பட்டது. இவை தனிதனிப் பொருள் உணர்த்தின. இவ்வூர் மக்களெல்லாம் போர்க்குப் போயினார் என்றவழி ஆண்பால் உணரப்பட்டது. இவ்வூர் மக்களெல்லாம் கைத்தீராடினார் என்றவழிப் பெண்பால் உணரப்பட்டது. இவ்வூர்ப் பெற்றமெல்லாம் அறம் கறக்கும் என்றவழிப் பெண்பால் உணரப்பட்டது. இவ்வூர்ப் பெற்றமெல்லாம் உழவு ஒழிந்தன என்றவழி ஆண்பால் உணரப்பட்டது. இவை பொதுப் பொருள் உணர்த்தின. இவை வினையினாற் பொருள் விளக்கின. மாவும் மருதும் அவை என்றவழி மாமரமென்பது அறியப்பட்டது. மாவும் புள்ளும் என்றவழி விலங்கென்பது அறியப்பட்டது. இவை இனம். இப்பொழிலகத்து நூறு மாவுள என்றவழி மரம் என்பது அறியப்பட்டது. இப்போர்க்களத்து நூறுமாவுள என்றவழி விலங்கென்பது அறியப்பட்டது. இவை சார்பு. பொதுமைபுணர்த்தும் பலபொருளொருசொல் இனமும் சார்பும்பற்றி வருவன வந்தவழிக்கண்டு கொள்க. (இ. ஏ.)

‡51. ஒன்றுவினை மருங்கின் ஒன்றித் தோன்றும்.

மேலதற்கோர் புறநடையுணர்த்துதல் நுதலிற்று.

இ ள் :—வினைவேறுபடும் பல பொருள் ஒருசொல், வேற்று வினை கொண்டு முடிதலேயன்றி இருபொருட்கும் பொருந்தின ஒருவினை கொண்டு முடியின், பிறிதொரு சொல்லோடு (பொருளொடு இ. வ.) ஒன்றிப்பொருள் தோன்றும். எ-று.

பிறிதொரு சொல்லென்பது எஞ்சி நின்றது.

---

‡ 51, 52-ம் சூத்திரங்களைச் சேனாவரையர் ஒன்றாக்குவார்.

ஓடாத தானை நளனென் றுளனொருவன்
பீடாருஞ் செல்வப் பெடைவண்டோ—டோ
முருகுடைய மாதர் முலைநனைக்குந் தண்டா
ரருகுடையான் வெண்குடையா னங்கு. (கஅ)

சீத மதிக்குடைக்கீழ்ச் செம்மை யறங்கிடப்பத்
தாதவிழ்பூந் தாரான் றனிக்காத்தான்—மாத
ரருகூட்டும் பைங்கிளியு மாடற் பருந்து
மொருகூட்டில் வாழ வுலகு. (கக)

வாங்குவளைக் கையார் வதன மதிபூத்த
பூங்குவளைக் காட்டிடையே போயினான்—தேங்குவளைத்
தேனாடி வண்டு சிறகுலர்த்து நீர்நாடன்
பூநாடிச் சோலை புக. (உ0)

வென்றி மதவேடன் வில்லெடுப்ப வீதியெலாந்
தென்றன் மதுநீர் தெளித்துவர—நின்ற
தளவேனன் மீதலருந் தாழ்வரைசூழ் நாடற்
கிளவேனில் வந்த தெதிர். (உக)

தேரிற் றுகளைத் திருந்திழையார் பூங்குழலின்
வேரிப் புனலணைப்ப வேயடைந்தான்—கார்வண்டு [ங்கிப்
தொக்கிருந்தா வித்துழலுந் தூங்கிருள்வெய் யோற்கொதுபுக்கிருந்தா லன்ன பொழில். (உஉ)

நீணிறத்தாற் சோலை நிறம்பெயர நீடியதன்
றூணிறத்தாற் பொய்கைத் தலஞ்சிவப்ப—மாணிறத்தான்
முன்னப்புட் டோன்று முளரித் தலைவைகு
மன்னப்புட் டோன்றிற்றே யாங்கு. (உங)

பேதை மடவன்னந் தன்னைப் பிழையாமன்
மேதிக் குலமேறி மென்கரும்பைக்—கோதிக்
கடித்துத்தான் முத்துமிழுங் கங்கைநீர் நாடன்
பிடித்துத்தா வென்றான் பெயர்ந்து. (உச)

நாடிமட வன்னத்தை நல்ல மயிற்குழா
மோடி வளைக்கின்ற தொப்பவே—நீடியநற்
பைங்கூந்தல் வல்லியர்கள் பற்றிக் கொடுபோந்து
தங்கோவின் முன்வைத்தார் தாழ்ந்து. (உரு)

அன்னந் தனைப்பிடித்தங் காயிழையார் கொண்டுபோய்
மன்னன் றிருமுன்னர் வைத்தலுமே—யன்ன
மலங்கிற்றே தன்னுடைய வான்கிளையைத் தேடிக்
கலங்கிற்றே மன்னவனைக் கண்டு. (உசு)

அஞ்சன் மடவனமே யுன்ற னணிநடையும்
வஞ்சி யனையார் மணிநடையும்—விஞ்சியது
காணப் பிடித்ததுகா ணென்றான் களிவண்டு
மாணப் பிடித்ததார் மன். (உஎ)

செய்ய கமலத் திருவை நிகரான
தையல் பிடித்த தனியன்னம்—வெய்ய
வடுமாற்ற மில்லா வரசன்சொற் கேட்டுத்
தடுமாற்றந் தீர்ந்ததே தான். (உஅ)

திசைமுகந்த வெண்கவிகைத் தேர்வேந்தே யுன்ற
னிசைமுகந்த தோளுக் கிசைவாள்—வசையி
றமையந்தி யென்றோதுந் தையலாண் மென்றோ
ளமையந்தி யென்றோ ரணங்கு. (உகூ)

அன்ன மொழிந்த மொழிபுகா முன்புக்குக்
கன்னி மனக்கோயில் கைக்கொள்ளச்—சொன்னமயி
லார்மடந்தை யென்றா னநங்கன் சிலைவளைப்பப்
பார்மடந்தை கோமான் பதைத்து. (௩௰)

எழுவதுகொன் மன்னு விலங்கிழைபேர் ஆண்டக்
கொழுநிதியிற் சாய்ந்த குவளை—யுழுநர்
மடைமிதிப்பத் தேமாயு மாடொலிநீர் நாடன்
கொடைவிதர்ப்பன் பெற்றதோர் கொம்பு. (௩௧)

நாற்குணமு நாற்படையா வைம்புலனு நல்லமைச்சா
வார்க்குஞ் சிலம்பே யணிமுரசா—வேற்படையும்
வாளுமே கண்ணா வதனமதிக் குடைக்கீ
ழாளுமே பெண்மை யரசு. (௩௨)

மோட்டிளங் கொங்கை முடியச் சுமந்தேற
மாட்டா திடையென்று வாய்விட்டு—நாட்டே
னலம்புவார் கோதை யடியிணையில் வீழ்ந்து
புலம்புமா நூபுரங்கள் பூண்டு. (௩௩)

என்று நுடங்கு மிடையென்ப வேழுலகு
நின்ற கவிகை நிழல்வேந்தே—யொன்றி
யறுகாற் சிறுபறவை யஞ்சிறகால் வீசுஞ்
சிறுகாற்றுக் காற்றாது தேய்ந்து. (௩௪)

செந்தேன் மொழியாள் செறியளக பந்தியின்கீ
ழிந்து முறியென் றியம்புவார்—வந்தென்றும்
பூவாளி வேந்தன் பொருவெஞ் சிலைசார்த்தி
யேவாளி தீட்டு மிடம். (௩௫)

அன்னமே நீயுரைத்த வன்னத்தை யென்னாவி
யுன்னவே சோரு முனக்கவளோ—டென்னை
யடைவென்றான் மற்றந்த வன்னத்தை முன்னே
நடைவென்றா டன்பா னயந்து. (௩௬)

பூமனைவாய் வாழ்கின்ற புட்குலங்கள் யாமவடன்
மாமனைவாய் வாழு மயிற்குலங்கள்—காமன்
படைகற்பான் வந்தடைந்தான் பைந்தொடியாள் பாத
நடைகற்பான் வந்தடைந்தே நாம். (௩௭)

ஊற்றது நெஞ்ச மெழுந்த திருங்காத
லற்றது மான மழிந்ததுநாண்—மற்றினியுன்
வாயுடைய தென்னுடைய வாழ்வென்றான் வெங்காமத்
தீயுடைய நெஞ்சுடையான் றேர்ந்து. (௩௮)

வீமன் றிருமடந்தை மென்முலையை யுன்னுடைய
வாம நெடும்புயத்தே வைகுவிப்பேன்—சேம
நெடுங்குடையா யென்றுரைத்து நீங்கியதே யன்ன
மொடுங்கிடையா டன்பா லுயர்ந்து. (௩௯)

இவ்வளவிற் செல்லுங்கொ லிவ்வளவிற் காணுங்கொ
லிவ்வளவிற் காத லியம்புங்கொ—லிவ்வளவின்
மீளுங்கொ லென்றுரையா விம்மினான் மும்மதமின்
றாளுங்கொல் யானை யரசு. (௪௦)

சேவல் குயிற்பெடைக்குப் பேசுஞ் சிறுகுரல்கேட்
டாவி யுருகி யழிந்திட்டான்—பூவி
னிடையன்னஞ் செங்கா லிளவன்னஞ் சொன்ன
நடையன்னந் தன்பா னயந்து. (௪௧)

கோதை சுமந்த கொடிபோ லிடைநுடங்கத்
தாதை திருவடிமேற் றான்வீழ்ந்தாள் — மீதெல்லாங்
காந்தாரம் பாடிக் களிவண்டு நின்றாற்றும்
பூந்தார மெல்லோதிப் பொன். (௫௪)

போரழகு சோர்கின்ற தென்னப் பிறைநுதன்மே
னீரரும்பத் தன்பேதை நின்றாளைப் — பாராக்
குலவேந்தன் சிந்தித்தான் கோவேந்தர் தம்மை
மலர்வேய்ந்து கொள்ளு மணம். (௫௫)

மங்கை சுயம்வரநா ளேழென்று வார்முரச
மெங்கு மறைகென் றியம்பினான் — பைங்கமுகின்
கூந்தன்மேற் கங்கைக் கொழுந்தோடு நன்றுடன்
வேந்தர்மேற் றூதோட விட்டு. (௫௬)

மாமுத்த வெண்குடையான் மால்களிற்றான் வண்டிரைக்குந்
தாமத் தரிச்சந் திரன்சுவர்க்கி — நாமத்தாற்
பாவேய்ந்த செந்தமிழா மென்னப் பரந்ததே
கோவேந்தர் செல்வக் குழாம். (௫௭)

செந்தடையும் வண்டுறைதார்ச் செய்யாள் வளர்மார்பன்
கந்தடையும் வேழக் கடைத்தலைவாய் — வந்தடைந்த
பூவேந்தர் தங்கள் கிளை பொன்னகரி லீண்டிற்றே
கோவேந்தன் மாதைக் குறித்து. (௫௮)

புள்ளுறையுஞ் சோலைகளும் பூங்கமல வாவிகளு
முள்ளும் புறமு மினிதுறைந்தார் — தெள்ளரிக்கட்
பூமகளைப் பொன்னைப் பொருவேல் விதர்ப்பன்றன்
கோமகளைத் தம்மனத்தே கொண்டு. (௫௯)

வழிமேல் விழிவைத்து வாணுதலாளுட
மொழிமேற் செவிவைத்து மோகச்—சுழிமேற்ற
னெஞ்சோட வைத்தயர்வான் கண்டா னெடுவானின்
மஞ்சோட வன்னம் வர. (சுO)

முகம்பார்த் தருணோக்கி முன்னிரந்து செல்வர்
அகம்பார்க்கு மற்றோரைப் போல—மிகுங்காதல்
கேளா விருந்திட்டா னன்னத்தைக் கேளாரை
வாளான் விருந்திட்ட மன். (சுக)

அன்னக் குலத்தி னரசே யழிகின்ற
வென்னுயிரை மீள வெனக்களித்தாய்—முன்னுரைத்த
தேமொழிக்குத் தீதிலவே யென்றான் றிருந்தாரை
யேமொழிக்கும் வேலா னெடுத்து. (சுஉ)

கோற்றவன்ற னேவலினாற் போயக் குலக்கொடிபா
லுற்றதுவு மாங்கவடா னுற்றதுவு—முற்று
மொழிந்ததே யன்ன மொழிகேட் டரசற்
கழிந்ததே யுள்ள வறிவு. (சுங)

கேட்ட செவிவழியே கேளா துணர்வோட
வோட்டை மனத்தோ டுயிர்தாங்கி—மீட்டுங்
குழியிற் படுகரியோற் கோமான் கிடந்தான்
றழலிற் படுதளிர்போற் சாய்ந்து. (சுச)

கோதை சுயம்வரநாள் கொற்றவனுக் குற்றுரைப்ப
வேதமிலாக் காட்சியர்வந் தெய்தினார்—போதிற்
பெடையோடு வண்டுறங்கும் பேரொலிநீர் நாட
னடையாத வாயி லகம். (சுரு)

காவலன்றன் றூதர் கடைகா வலர்க்கறிவித்
தேவலிற்போ யீதென் றியம்புதலு—மாவிற்
பொலிந்ததேர் பூட்டென்றான் பூவாளி பாய
மெலிந்ததோள் வேந்தன் விரைந்து. (சுசு)

கேட்ட சிறுமருங்குற் கீழ்மகளிர் கீள்வரம்பி
லிட்ட பசுங்குவளை யேரடித்த—கட்டி
கரையத்தே னூறுங் கடனாட னூர்க்கு
விரையத்தே ரேறென்றான் வேந்து. (சுஎ)

சடைச்செந்நெல் பொன்விளைக்குந் தன்னாடு பின்னாக்
கடற்றானை முன்னாகக் கண்டா—னடற்கமைந்த
வில்லியரும் பொற்றாம வீமன் றிருமகளா
நல்லுயிரும் வாழு நகர். (சுஅ)

நெற்றித் தனிக்கண் ணெருப்பைக் குளிர்விக்குங்
கொற்றத் தனியாழ்க் குலமுனிவ—னுற்றடைந்தான்
றேனாடுந் தெய்வத் தருவுந் திருமணியும்
வானாடுங் காத்தான் மருங்கு. (சுகூ)

வீரர் விறல்வேந்தர் விண்ணாடு சேர்கின்றா
ராரு மிலராலென் றையுற்று—நாரதனார்
நன்முகமே நோக்கினா னாகஞ் சிறகரிந்த
மின்முகவேற் கையான் விரைந்து. (எ0)

வீமன் மடந்தை மணத்தின் விரைதொடுத்த
தாமம் புனைவான் சுயம்வரத்து—மாமன்னர்
போயினா ரென்றான் புரந்தரற்குப் பொய்யாத
வாயினான் மாதவத்தோர் மன். (எக)

அழகு சுமந்திளைத்த வாகத்தாள் வண்டு
பழகு கருங்கூந்தற் பாவை—மழகளிற்று
வீமன் குலத்துக்கோர் மெய்த்தீப மற்றவளே
காமன் றிருவுக்கோர் காப்பு. (எ௨)

மால்வரையை வச்சிரத்தா லீர்ந்தானும் வானவருங்
கோல்வளைதன் மாலை குறித்தெழுந்தார்—சால்புடைய
விண்ணாடு நீங்கி விதர்ப்பன் றிருநகர்க்கு
மண்ணாடு நோக்கி மகிழ்ந்து. (எ௩)

பைந்தெரியல் வேல்வேந்தன் பாவைபாற் போயினதன்
சிந்தை கெடுத்ததனைத் தேடுவான்—முந்தி
வருவான்போற் றேர்மேல் வருவானைக் கண்டார்
பெருவானிற் றேவர் பெரிது. (எ௪)

காவற் குடைவேந்தைக் கண்ணுற்று விண்ணவர்கோ
னேவற் றொழிலுக் கிசையென்றா—னேவற்கு
மன்னவனு நேர்ந்தான் மனத்தினான் மற்றதனை
யின்னதென வோரா திசைந்து. (எ௫)

செங்கண் மதயானைத் தேர்வேந்தே தேமாலை
யெங்களிலே சூட்ட வியல்வீமன்—மங்கைபாற்
றாதாக வென்றானத் தோகையைத்தன் னாகத்தாற்
கோதாக வென்றானக் கோ. (எ௬)

தேவர் பணிதலைமேற் செல்லுந் திரிந்தொருகான்
மேவுமிளங் கன்னிபான் மீண்டேகும்—பாவிற்
குழல்போல நின்றுழலுங் கொள்கைத்தே பூவி
னிழல்போலுந் தண்குடையா னெஞ்சு. (எஎ)

ஆவ துரைத்தா யதுவே தலைநின்றேன்
றேவர்கோ னேயத் திருநகரிற்—காவல்
கடக்குமா றென்னென்றான் காமநீ ராழி
யடக்குமா றுள்ளத் தவன். (எஅ)

ஓர்வெஞ் சிலையொழிய வச்சிரத்தான் மால்வரையைப்
போர்வெஞ் சிறகறுத்த பொற்றோளான்—யாருமுனைக்
காணார்போய் மற்றவளைக் காணென்றான் கார்வண்டின்
பாணாருந் தாரானைப் பார்த்து. (எகூ)

இசைமுகந்த வாயு மியலறிந்த நாவுந்
திசைமுகந்தா லன்ன தெருவும்—வசையிறந்த
பொன்னாடு போந்திருந்தாற் போன்றதே போர்விதர்ப்ப
ரன்னாடர் கோமா னகர். (அ0)

தேங்குவளை தண்ணிலை செந்தா மரைமலரப்
பூங்குவளை தாமரைக்கே பூத்ததே—யாங்கு
மதுநோக்குந் தாரானும் வாணுதலுந் தம்மிற்
பொதுநோக் கெதிர்நோக்கும் போது. (அக)

நீண்ட கமலத்தை நீலக் கடைசென்று
தீண்டு மளவிற் றிறந்ததே—பூண்டதோ
ரற்பின்றாழ் கூந்தலாள் வேட்கை யகத்தடக்கிக்
கற்பின்றாழ் வீழ்த்த கதவு. (அஉ)

உய்ஞ்சு கரையேற வொட்டுங்கொ லொண்டொடியா
ணெஞ்சு தடவு நெடுங்கண்கள்—விஞ்சவே
நீண்டதோ வங்ஙனே யிங்ஙனே நீண்மலரா
ளாண்டதோ மன்ன னழகு. (அங)

மன்னுகத் துள்ளழுந்தி வாரணிந்த மென்முலையும்
பொன்னுணும் புக்கொளிப்பப் புல்லுவெனென்—றன்னு
வெடுத்தபே ரன்பை யிடையே புகுந்து
தடுத்ததே நாணுந் தறி. (அச)

காவல் கடந்தெங்கள் கன்னிமா டம்புகுந்தாய்
யாவனோ விஞ்சைக் கிறைவனோ—தேவனோ
வுள்ளவா சொல்லென்று ளுசற் குழைமீது
வெள்ளவா ணீர்சோர விட்டு. (அரு)

தீராத காமத் தழலைத்தன் செம்மையெனு
நீரா லவித்துக் கொடுநின்று—வாராத
பொன்னுடை ரேவலுடன் போந்தவா சொல்லித்த
னன்றுடுஞ் சொன்னு னளன். (அசு)

என்னுரையை யாதெதன் றிகழா திமையவர்வாழ்
பொன்னுலகங் காக்கும் புரவலனை—மென்மாலை
சூட்டுவா யென்றான் றெடையிற்றேன் றும்பிக்கே
யூட்டுவா னெல்லா முரைத்து. (அஎ)

இயமரநின் றார்ப்ப வினவளைநின் றேங்க
வயமருதோண் மன்னு வருத்த—சுயம்வரந்தா
னின்பொருட்டா லென்று நினைகென்று ணீள்குடையான்
றன்பொருட்டா னைவா டளர்ந்து. (அஅ)

போதரிக்கண் மாகரான் பொன்மாலை சூட்டத்தா
ஞதரித்தார் தம்மோ டவையகத்தே—சோதிச்
செழுந்தரள வெண்குடையாய் தேவர்களு நீயு
மெழுந்தருள்க வென்று ளெடுத்து. (அகூ)

அவர்களைப் பூதங்கள் தம்முடைய காலினும் கையினும் கட்டிக்கொண்டன கட்டியிழுத்து வந்தன எனக் குறிப்புக் கொள்க. படர்ந்த பாரம் - உடற் பாரத்தை. கிடப்ப கவர்ந்து தின்று பாழ்படுத்தின எனக் கூட்டுக. நரம்பும் எலும்பும் கிழ்க் கிடப்பத் தசையைக் கவர்ந்து தின்று உடலை வறிதாக்கின என்று கொள்க. ஏறும் - உயர்ந்த; நாலுதிக்கு - நான்கு திசை. ஆறு நால் அமண் பிணம் என்றது இருபத்து நான்கு தீர்த்தங்கரரைக் குறித்தது. அவர்கள் விருஷபவர், அஜிதர், சம்பவர் முதலியோர் இவர் பெயர்களைச் சமணமத நூலிற் காண்க. தாழியிற் பிணங்களும் என்றது மிக முதிர்ந்தவரைச் சாடியில் இட்டுவைக்கும் வழக்கத்தைக் குறித்ததாம். பாழி - அமணர் தவஞ் செய்யும் இடம். வெறும் தவப்பாழி - பயனில்லாத தவஞ் செய்யும் இடம். தவத்திற்குத் தக்க பயனில்லை. வெறுந் தவம் என்பது கருத்து. "ஓடிமறலி யொளிப்ப முதுமக்கட், சாடி வகுத்த தராபதியும்" "பதுமக் கடவுள் படைப் படையக் காத்த முதுமக்கட் சாடி முதலோன்" என மூவருலாவில் வருவன காண்க. துளப்பு - வயிறு. எழ - எழுந்து புக. அமணப் பிணங்கள் எழுந்து வயிற்றுட் புக.

தேரர்தே அடங்க - புத்த தேவர் எல்லாரையும் அடங்க வெட்டின பூதங்கள் என்பது கூறப்பட்டது. "பண்டுபோல பால் எழுங்கொல்" என்று மாற்றுக. இது முற்காலத்திற் புத்த தேவருடம்பிற் பால் சுரந்ததைக் குறித்தது. புலிக்குடம்பைக் கொடுத்தபோது புலி கடிக்கக் குருதி வடியாமற் பால் பெருகியது; பகைவர் வாளால் வெட்டியபோதும் குருதி வடியாமற் பால்வழிந்தது. இதனை யுட்கொண்டு 'பண்டுபோலப் பால் எழுங் கொல்" என்றார். பூதகணங்கள் புத்தருடம்பினை வெட்டும்போது பால் வருமோ குருதி வருமோ பார்ப்போம் என்றெண்ணி வெட்டின என்பது கருத்து. பசும் புணீர் - புதிய குருதி. கொல் ஐயப் பொருளில் வந்த இடைச் சொல்லாம். த்ரிதண்டு - மூன்று தண்டம். இஃது ஆல், அரசு, புரசு என்ற மூன்று மரங்களின் துண்டம். இவற்றைக் கயிற்றாற் கட்டித் துறவியர் கையில் வைத்திருப்பர். மூன்று தேவரும் ஒருவர் என்ற மறைக் கொள்கையை விளக்குவது அது. ஏகம் - ஒன்று. ஒரு தண்டு வைத்திருப்பது. அது கடவுள் ஒருவர் என்பதை விளக்குவது. சோரர் - கள்ளர்; கள்ளத் துறவியர். ஒரு சமயமும் ஒரு மதமும் இல்லாமற் பல மதத்தினரிடத்தும் சென்று பொருள் வாங்கி யுண்டு மடத்திற் கிடப்பவரைச் சுட்டியது "சோரர்" என்றது. கொத்து - கூட்டம். அக் கூட்டத்தாரை வாரிக்கொண்டு சென்றன பூதகணங்கள் என்று சொற் பெய்து விரித்துக்கொள்க. வேலைவாய் - கடலிடத்தில். மேருவில்லி - சிவபெருமான்; இமயமலையை வில்லாக எடுத்தவர் என்பது காரணம். மஞ்சனச்சாலை சிவனுக்கு நீராடுஞ் சாலையாவது வடவைத்தீயுள்ள இடம், யுக முடிவில் வடவைத்தீயுட் குளித்து நெருப்பாகவே நின்று உலகத்தை யழிப்பர் என்பது கருத்து: அரக்கர்களை வடவைத்தீயிற் சுட்டுப் பற்களிற் கடித்து மென்று குதட்டின பல பூதங்கள் என்க. மஞ்சனம் - நீராடல். வாள் எயிறு - வாள்போன்ற பல். சவட்டி - கொன்று.

காவிவண்ணன் நீலமலர்போன்ற நிறமுடையவன்: கரியவன். அவன் ஊர்தி - கருடன். வேத போத காரணன்-வேதத்திற்கும் போதத்திற்கும் காரணமா யிருப்பவன் என்பது பொருள். இது பிரமனைச் சுட்டியதாம். வேதம் மறை. போதம்-அறிவு (ஞானம்) இவை பிரமனாற் கூறப்பட்டன முதலில். தூவி - சிறகு. கருடனையும் அன்னத்தையும் கலந்து சுட்டுத்

பண்புகொள வருதலாவது, அப்பெயர்ப் பொருண்மை பண்பு கொள்ளுமாறு வருஞ் சொல்.

உ-ம்:—சாத்தன் கரியன், நெடியன் என்பன.

பெயர்கொள வருதலாவது, அப்பெயர்ப் பொருண்மை யுணரப் பிறிதோர் காரணத்தான் வந்து முற்பெயரோடு ஒட்டுப் படாது நிற்பது.

உ-ம்:—சாத்தன் வணிகன், மூடவன் என்பன.

என்று அன்றி யனைத்தும் பெயர்ப் பயனிலையே என்பது, என்று சொல்லப்பட்ட அவ்வனைத்தும் பெயர்க்குப் பயனிலையாம். எ-று.

பயனிலை என்பது:—பெயர் வாளாது நிற்குமாயின், செப் பின்கட் பயனின்றாம் ஆதலான், அதனை முடிக்கும் சொல் பயனிலை யென்றாயிற்று. அஃதேல், இவை யெல்லாம் பெயர்ப் பொருண்மை யைச் சுட்டி நிற்றலின், பொருண்மை சுட்டல் என அடங்கும் வனின், அடங்குமாயினும், பொருண்மை சுட்டல் பொருண்மை மாத்திரத்தைக் குறித்தலானும், வியங்கொள வருதல் அப் பொருண்மை புடை பெயர்தற்கு நிமித்தம் ஆகி வருதலானும், வினைநிலை யுரைத்தல் அப்பொருளின் புடைபெயர்ச்சி யாகலானும், வினாவிற் கேற்றல் அவ்வாறன்றி வினாவப்படும் நிலைமையதாகி நிற்றலானும், பண்புகொள வருதல் அப்பொருட்கண் உள்ளதோர் புணர்ப்பைக் குறித்து நிற்றலானும், பெயர்கொள வருதல் அப் பொருண்மை முழுதும் உணரப் பிறிதோர் வாய்பாடாக வருத லானும், வகுத்துக் கூறினார் என்க.

சாத்தன் கலையன் ஆயினான், இரும்பு பொன் ஆயிற்று என் பன எவ்வாறு வந்தன எனின், அவையும் பொருளின் புடை பெயர்ச்சி யாகலானும், ஒன்று ஒன்றாகித் திரிதலாகிய வினையான் வருதலானும், வினைநிலை யுரைத்தலுள் அடங்கும். அஃதேல், கலை யன் பொன் என்னும் பெயரை எழுவாய் என்றுபோ பயனிலை என்றுபோ எனின், இரண்டும் அல்ல: கலையன் ஆதல், பொன் ஆதல் எனத் திரிபு குறித்து நின்றன, பெயர் குறித்து நின்றன வல்லபடா வென்க.

கூட்டுமை போற்சிறந்த கூரிருளைக் கூன்கோட்டாற்
கோட்டுமான் கொண்ட குளிர்திங்க—ளீட்டுமணிப்
பூணிலா மென்முலைமேற் போதச் சொரிந்ததே
நீணிலா வென்னு நெருப்பு. (க0உ)

அன்னங்கா ளீங்களுபவ் வாதித்தன் றானும்போய்
மன்னும் படியகலா வல்லிரவின்—மின்னு
மழைத்தாரை வல்லிருட்கும் வாடைக்கு நாங்கள்
பிழைத்தால்வத் தேதென்னும் பேர். (க0ங)

சேப்பிளங் கொங்கைமீர் திங்கட் சுடர்பட்டுக்
கொப்புளங் கொண்ட குளிர்வானை—யிப்பொழுது
மீன்பொதிந்து நின்ற விசும்பென்ப தென்கொலோ
தேன்பொதிந்த வாயாற் றெரிந்து. (க0ச)

கானுந் தடங்காவுங் காமன் படைவீடு
வானுந்தேர் வீதி மறிகடலு—மீனக்
கொடியாடை வையமெலாங் கோதண்ட சாலை
பொடியாடி கொன்றதெல்லாம் பொய் (க0ரு)

கோள்ளைபோ கின்ற துயிரென்னுங் கோளரவின்
முள்ளெயிறே மூரி நிலாவென்னு—முள்ளங்
கொடிதிரா வென்னுங் குழையுங் கழல்போல
நெடிதிரா வாய்புலரா நின்று. (க0சு)

வெங்கதிரோன் றன்னை விழுங்கிப் புழுங்கியோ
கொங்கை யனலிற் கொளுந்தியோ—திங்கள்
விரிகின்ற வெண்ணிலவால் வேகின்ற தேயோ
வெரிகின்ற தென்னோ விரா. (க0எ)

ஊழி பலவோ ரிரவாயிற் றோவென்னுங்
கோழி குரலடைத்த தோவென்னும் — மாழி
துயிலாதோ வென்னுஞ் சுடர்மதியங் கான்ற
வெயிலா லுடலுருகா வீழ்ந்து. (க0அ)

ஆடி வரிவண் டருகே பரக்கவே
வாடி மெலிவாள் வனமுலைமே — லோடிப்
பொறையாகச் சோர்வாள் பொறுக்குமோ மோகத்
துறைவா யடங்காத் துயர். (க0கூ)

ஈர மதியே யிளநிலவே யிங்ஙனே
சோர்குழலின் மீதே சொரிவதேன் — மாரன்
பொரவளித்தான் கண்ணி யுனக்குப் புலரா
விரவளித்தா னல்லனோ வின்று. (கக0)

தாங்கு நிலவின் றழல்போய்த் தலைகொள்ளத்
தேங்குழல்சேர் வண்டு சிறைவெதும்ப — வோங்குயிர்ப்பிற்
றாமங் கரியாத் தனியே தளர்கின்றாள்
யாமங் கரியாக வின்று. (ககக)

மையிட்ட கண்ணருவி வார வளைசோரக்
கையிற் கபோலத் தலம்வைத்து — மெய்வருந்தித்
தேனிருந்த பூங்கணையே தீயாகத் தேமொழியர்
டானிருந்து செய்வா டவம். (ககஉ)

அள்ளிக் கொளலா யடையத் திரண்டொன்றாய்க்
கொள்ளிக்கும் விள்ளாத கூரிருளா — யுள்ளம்
புதையவே வைத்த பொதுமகளிர் தங்க
ளிதையமே போன்ற திரா. (ககங)

ஊக்கிய சொல்ல ரொலிக்குந் துடிக்குரலர்
வீக்கிய கச்சையர் வேல்வாளர்—காக்க
விடையாமங் காவலர்கள் போந்தா ரிருளின்
புடையவா யிருள்புடைத்தாற் போன்று. (ககச)

சேமங் களிறுபுகத் தீம்பாலின் செவ்வழியாழ்
தாமுள் ளுறைபுகுதத் தார்வண்டு—காமன்றன்
பூவாளி யைந்திற் புகத்துயில் புக்கதே
யோவாது முந்நீ ருலகு. (ககரு)

ஊன்றின் றுவகையா லுள்ள வுயிர்புறம்பே
தோன்றுங் கழுதுந் துயின்றதே—தான்ற
னுரைசோராச் சோர வுடல்சோர வாயி
னிரைசோரக் கைசோர நின்று. (ககசா)

அன்றி லொருகண் டுயின்றொருக ணார்வத்தா
லின்றுணைமேல் வைத்துறங்கு மென்னுஞ்சொ—லின்று
தவிர்ந்ததே போலாற்றிச் சாம்புகின்ற போதே
யவிழ்ந்ததே கண்ணீ ரவட்கு. (ககஎ)

ஏழுலகுஞ் சூழிருளா யென்பொருட்டால் வேகின்ற
வாழ்துயர மேதென் றறிகிலேன்—பாழி
வரையோ வென்னுநெடுந்தோண் மன்னவோ தின்னு
மிரையோ விரவுக் கியான். (ககஅ)

கருவிக்கு நீங்காத காரிருள்வாய்க் கங்கு
லுருவிப் புகுந்ததா லூதை—பருகிக்கார்
வண்டுபோ கட்ட மலர்போன் மருண்மாலை
யுண்டுபோ கட்ட வுயிர்க்கு. (ககசு)

எழுந்திருக்கு மேமாந்து பூமாந் தவிசின்
விழுந்திருக்குந் தன்னுடம்பை மீளச்—செழுந்தரளத்
தாரோடு சேர்க்குந் துணையேது மில்லாதே
நாரோடு நின்றழியு நைந்து. (கஉ0)

விரிகின்ற மெல்லமளி வெண்ணிலவின் மீதே
சொரிகின்ற காரிருள்போற் சோரும்—புரிகுழலைத்
தாங்குந் தளருந் தழலே நெடிதுயிர்க்கு
மேங்குந் துயரோ டிருந்து. (கஉக)

உடைய மிடுக்கெல்லா மென்மேலே யோச்சி
விடிய மிடுக்கின்மை யாலோ—கொடியன்மேன்
மாகாதல் வைத்ததோ மன்னவர்த மின்னருளோ
வேகாத தென்னோ விரா. (கஉஉ)

மயங்குந் தெளியு மனநடுங்கும் வெய்துற்
றயங்கும் வறிதே யுலாவும்—வயங்கிழைபோய்ச்
சோருந் துயிலுந் துயிலாக் கருநெடுங்க
ணீருங் கடைசோர நின்று. (கஉ௩)

விழுது படத்திணிந்த வீங்கிருள்வாய்ப் பட்டுக்
கழுதுட வழிதேடுங் கங்குற்— பொழுதிடையே
நீருயிர்க்குங் கண்ணோடு நெஞ்சுருகி வீழ்வார்த
மாருயிர்க்கு முண்டோ வரண். (கஉ௪)

பூசுரர்தங் கைம்மலரும் பூங்குமுத மும்முகிழ்ப்பக்
காசினியுந் தாமரையுங் கண்விழிப்ப—வாச
மலர்ந்ததேங் கோதையா ளாழ்துயரத் தோடு
புலர்ந்ததே யற்றைப் பொழுது. (கஉ௫)

வில்லி கணையிழப்ப வெண்மதியஞ் சீரிழப்பத்
தொல்லை யிருள்கிழியத் தோன்றினான்—வல்லி
மணமாலை வேட்டிடுதோள் வாளரசர் முன்னே
குணவாயிற் செங்கதிரோன் குன்று. (கஉ௬)

முறைசெறிந்த நாளேழு முற்றியபின் கொற்ற
வரைசெறிந்த தோண்மன்னர் வந்தார்—விரைசெறிந்த
மாலை துவள முடிதயங்க வால்வளையுங்
காலை முரசுங் கலந்து. (கஉஎ)

மன்றலந்தார் மன்னர் நடுவணைய வந்திருந்தான்
கன்று குதட்டிய கார்நீல—முன்றிற்
குறுவிழிக்கு நேர்நாடன் கோதைபெருங் கண்ணின்
சிறுவிழிக்கு நோற்றிருந்த சேய். (கஉஅ)

நித்திலத்திற் பொற்றோடு நீலமணித் தோடாக
மைத்தடங்கண் செல்ல வயவேந்தர்—சித்த
மருங்கே வரவண்டின் பந்தர்க்கீழ் வந்தா
ளருங்கேழ் மணிப்பூ ணணங்கு. (கஉகூ)

பேதை மடமயிலைச் சூழும் பிணைமான்போற்
கோதை மடமானைக் கொண்டணைந்த—மாதர்
மருங்கின் வெளிவழியே மன்னவர்கண் புக்கு
நெருங்கினவே மேன்மே னிறைந்து. (கங0)

மன்னர் விழித்தா மரைபூத்த மண்டபத்தே
பொன்னின் மடப்பாவை போய்ப்புக்காள்—மின்னிறத்துச்
செய்யதாள் வெள்ளைச் சிறையன்னஞ் செங்கமலப்
பொய்கைவாய்ப் போவதே போன்று. (கஙக)

வடங்கொள் வனமுலையாள் வார்குழைமே லோடு
நெடுங்கட் கடைபார்த்து நின்றா—னிடங்கண்டு
பூவாளி வேந்தன்றன் பொன்னவம் பின்னேயிட்
டேவாளி நாணின்மே லிட்டு. (கநஉ)

மன்னர் குலமும் பெயரும் வளநாடு
மின்ன பரிசென் றியலணங்கு—முன்னின்று
தார்வேந்தன் பெற்ற தனிக்கொடிக்குக் காட்டினா
டேர்வேந்தர் தம்மைத் தெரிந்து. (கநந)

பொன்னி யமுதப் புதுக்கொழுந்து பூங்கமுகின்
சென்னி தடவுந் திருநாடன்—பொன்னிற்
சுணங்கவிழ்ந்த பூண்முலையாய் சூழமரிற் றன்னோர்
கணங்கவிழ்ந்த வேலனிவன் காண். (கநச)

போர்வாய் வடிவேலாற் போழப் படாதோருஞ்
சூர்வாய் மதராரிக்கட் டோகாய்கேள்—பார்வாய்ப்
பருத்ததோர் மால்வரையைப் பண்டொருகாற் செண்டாற்
றிரித்தகோ விங்கிருந்த சேய். (கநரு)

வென்றி நிலமடந்தை மென்முலைமேல் வெண்டுகில்போற்
குன்றருவி பாயுங் குடநாட—னின்றபுகழ்
மாதே யிவன்கண்டாய் மானத் தனிக்கொடியின்
மீதே சிலையுயர்த்த வேந்து. (கநசு)

ஆழி வடிம்பலம்ப நின்றானு மன்றொருகா
லேழிசைநூற் சங்கத் திருந்தானு—நீள்விசும்பி
னற்றேவர் தூது நடந்தானும் பாரதப்போர்
செற்றானுங் கண்டாயிச் சேய். (கநஎ)

தேரியி லிவன்கண்டாய் செங்கழுநீர் மொட்டை
யரவின் பசுந்தலையென் றஞ்சி—யிரவெல்லாம்
பிள்ளைக் குருகிரங்கப் பேதைப்புட் டாலாட்டும்
வள்ளைக் குருநாடர் மன். (கஙஅ)

தேமருதார்க் காளை யிவன்கண்டாய் செம்மலர்மேற்
காமருசங் கீன்ற கதிர்முத்தைத்—தாமரைதன்
பத்திரத்தா லேற்கும் படுகர்ப் பழனஞ்சூழ்
மத்திரத்தார் கோமான் மகன். (கஙகூ)

அஞ்சாயன் மானை யிவன்கண்டா யாலைவாய்
வெஞ்சாறு பாய விளைந்தெழுந்த—செஞ்சாலிப்
பச்சைத்தாண் மேதிக் கடைவாயிற் பாலொழுகும்
மச்சைத்தார் கோமான் மகன். (கசO)

வண்ணக் குவளை மலர்வௌவி வண்டெடுத்த
பண்ணிற் செவிவைத்தப் பைங்குவளை—யுண்ணா
தருங்கடா நிற்கு மவந்திநா டாளு
மிருங்கடா யானை யிவன். (கசக)

விடக்கதிர்வேற் காளை யிவன்கண்டாய் மீனின்
றொடக்கொழியப் போய்நிமிர்ந்த தூண்டின்—மடற்கமுகின்
செந்தோடு பீறித்தேன் செந்நெற் பசுந்தோட்டில்
வந்தோடு பாஞ்சாலர் மன். (கசஉ)

அன்னந் துயிலெழுப்ப வந்தா மரைவயலிற்
செந்நெ லரிவார் சினையாமை—வன்முதுகிற்
கூனிரும்பு தீட்டுங் குலக்கோ சலநாடன்
றேனிருந்த சொல்லாயிச் சேய். (கசங)

புண்டரிகந் தீயெரிவ போல்விரியப் பூம்புகைபோல்
வண்டிரியுந் தெண்ணீர் மகதர்கோ—னெண்டிசையிற்
போர்வேந்தர் கண்டறியாப் பொன்னுவம் பின்னுடைய
தேர்வேந்தன் கண்டாயிச் சேய். (கசச)

கூன்சங்கின் பிள்ளை கொடிப்பவளக் கோடிடறித்
தேன்கழியில் வீழத் திரைக்கரத்தால்—வான்கடல்வந்
தந்தோவெனவெடுக்கு மங்கநா டாளுடையான்
செந்தேன் மொழியாயிச் சேய். (கசரு)

வெள்வாளைக் காளைமீன் மேதிக் குலமெழுப்பக்
கள்வார்ந்த தாமரையின் காடுழக்கிப்—புள்ளோடு
வண்டிரியச் செல்லு மணிநீர்க் கலிங்கர்கோன்
றண்டெரியற் றேர்வேந்தன் றான். (கசசா)

அங்கை வரிவளையா யாழித் திரைகொணர்ந்த
செங்கண் மகரத்தைத் தீண்டிப்போய்—கங்கையிடைச்
சேல்குளிக்குங் கேகயர்கோன் றெவ்வாடற் கைவரைமேல்
வேல்குளிக்க நின்றானிவ் வேந்து. (கசஎ)

மாநீர் நெடுங்கயத்து வள்ளைக் கொடிமீது
தானேகு மன்னந் தனிக்கயிற்றிற்—போநீள்
கழைக்கோ தையமரக்குங் காந்தார நாடன்
மழைக்கோதை மானேயிம் மன். (கசஅ)

அங்கை நெடுவேற்க ணாயிழையாய் வாவியின்வாய்ச்
சங்கம் புடைபெயரத் தான்கலங்கிச்—செங்கமலப்
பூச்சிந்து நாட்டேறல் பொன்விளைக்குந் தன்பணைசூழ்
மாச்சிந்து நாட்டானிம் மன். (கசகூ)

காவலரைத் தன்சேடி காட்டக்கண் டீரிருவர்
தேவர் நளனுருவாச் சென்றிருந்தார்— பூவரைந்த
மாசிலாப் பூங்குழலாள் மற்றவரைக் காணாளின்
றாசலா நெற்று ளம். (௧௫0)

பூணுக் கழகளிக்கும் பொற்றொடியைக் கண்டக்கா
ணுக்கு நெஞ்சுடைய நல்வேந்தர்—நீணிலத்து
மற்றேவர் வாராதார் வானவரும் வந்திருந்தார்
பொற்றேர் நளனுருவாய்ப் போந்து. (௧௫௧)

மின்னுந்தார் வீமன்றன் மெய்ம்மரபிற் செம்மைசேர்
கன்னியா ளாகிற் கடிமாலை—யன்னந்தான்
சொன்னவனைச் சூட்ட வருளென்றாள் சூழ்விதியின்
மன்னவனைத் தன்மனத்தே வைத்து. (௧௫௨)

கண்ணிமைத்த லானடிகள் காசினியிற் றோய்தலான்
வண்ண மலர்மாலை வாடுதலா—னெண்ணி
நறுந்தா மரைவிரும்பு நன்னுதலே யன்றோ
னறிந்தா ணளன்றன்னை யாங்கு. (௧௫௩)

விண்ணரச ரெல்லாரும் வெள்கி மனஞ்சுளிக்கக்
கண்ணகன் ஞாலங் களிகூர—மண்ணரசர்
வன்மாலை தம்மனத்தே சூட வயவேந்தைப்
பொன்மாலை சூட்டினாள் பொன். (௧௫௪)

திண்டோள் வயவேந்தர் செந்தா மரைமுகம்போய்
வெண்டா மரையாய் வெளுத்தவே—யொண்டாரைக்
கோமாலை வேலான் குலமாலை வேற்கண்ணாள்
பூமாலை பெற்றிருந்தபோது. (௧௫௫)

மல்லன் மறுகின் மடநார் குடனாகச்
செல்லு மழவிடைபோற் செம்மாந்து—மெல்லியலாள்
பொன்மாலை பெற்றதோ ளோடும் புறப்பட்டா
னன்மாலை வேலா னளன். (௧௫௬)

வேலை பெறுவமுதம் வீமன் றிருமடந்தை
மாலை பெறுதகலும் வானாடர்—வேலை
பொருங்கலிநீர் ஞாலத்தைப் புன்னெறியி லாக்கு
மிருங்கலியைக் கண்டா ரெதிர். (௧௫௭)

எங்குவா ரென்றென் றிமையவர்தங் கோன்வினவத்
தீங்கு தருகலியுஞ் செப்பினா—னீங்கள்
விருப்பான வீமன் றிருமடந்தை யோடு
மிருப்பான் வருகின்றேன் யான். (௧௫௮)

மன்னவரில் வைவே னளனை மதிவதனக்
கன்னி மணமாலை கைக்கொண்டா—னுன்னுடைய
வுள்ளக் கருத்தை யொழித்தே குதியென்றான்
வெள்ளைத் தனியானை வேந்து. (௧௫௯)

விண்ணரசர் நிற்க வெறுத்தேன் மணமாலை
மண்ணரசர்க் கீந்த மடமாதி—னெண்ணங்
கெடுக்கின்றேன் மற்றவடன் கேள்வனுக்குங் கீழ்மை
கொடுக்கின்றே னென்றான் கொதித்து. (௧௬௦)

வாய்மையுஞ் செங்கோல் வளனு மனத்தின்கட்
டூய்மையு மற்றவன் றோள்வலியும்—பூமா
னெடுங்கற்பு மற்றவற்கு நின்றுரைத்துப் போனா
னடுங்கொற்ற வச்சிரத்தா னங்கு. (௧௬௧)

சேருக்கதிர்வேற் கன்னியுடன் றேர்வேந்தன்கூட
லிருக்கத் தரியே னிவரைப்—பிரிக்க
வுடனாக வென்று னுடனே பிறந்த
விடநாக மன்னன் வெகுண்டு. (கசஉ)

வெங்கதிரோன் றானும் விதர்ப்பன் றிருமடந்தை
மங்கலநாட் காண வருவான்போற்—செங்குமுதம்
வாயடங்க மன்னற்கும் வஞ்சிக்கு நன்னெஞ்சிற்
றீயடங்க வேறினன் றேர். (கசஙா)

இன்னுயிர்க்கு நேரே யிளமுறுவ லென்கின்ற
பொன்னழகைத் தாமே புதைப்பார்போன்-மென்மலருஞ்
சூட்டினார் சூட்டித் துடிசே ரிடையாளைப்
பூட்டினார் மின்னிமைக்கும் பூண். (கசச)

கணிமொழிந்த நாளிற் கடிமணமுஞ் செய்தா
ரணிமொழிக்கு மண்ண லவற்கும்—பணிமொழியார்
குற்றேவல் செய்யக் கொழும்பொன் னறைபுக்கார்
மற்றெவரு மோவ்வார் மகிழ்ந்து. (கசரு)

சேந்திருவின் கொங்கையினுந் தேர்வேந்த னாகத்தும்
வந்துருவ வார்சிலையைக் கால்வளைத்து—வெந்தீயு
நஞ்சுந் தொடுத்தனைய காம மலர்வாளி
யஞ்சுந் தொடுத்தா னனங்கன். (கசசா)

ஒருவ ருடலி லொருவ ரொதுங்கி
யிருவ ரெனுந்தோற்ற மின்றிப்—பொருவெங்
கனற்கேயும் வேலானுங் காரிகையுஞ் சேர்ந்தார்
புனற்கே புனல்கலந்தாற் போன்று. (கசஎ)

குழைமேலுங் கோமா னுயிர்மேலுங் கூந்தன்
மழைமேலும் வாளோடி மீள—விழைமேலே
யல்லோடும் வேலா னகலத் தொடும்பொருதாள்
வல்லோடுங் கொங்கை மடுத்து. (௧௬௮)

வீரனக லச்செறுவின் மீதோடிக் குங்குமத்தி
னீர விளவண்ட விட்டதே—நேர்பொருத
காராரு மெல்லோதிக் கன்னியவள் காதலெனு
மோராறு பாய வுடைந்து. (௧௬௯)

கொங்கை முகங்குழையக் கூந்தன் மழைகுலையச்
செங்கயற்க ணோடிச் செவிதடவ—வங்கை
வளைபூச லாட மடந்தையுடன் சேர்ந்தான்
விளைபூசற் கொல்யானை வேந்து. (௧௭0)

தைய றளிர்க்கரங்க டன்றடக்கை யாற்பற்றி
வைய முழுது மகிழ்தூங்கத்— துய்ய
மணந்தான் முடித்ததற்பின் வாணுதலுந் தானும்
புணர்ந்தார் நெடுங்காலம் புக்கு. (௧௭௧)

சுயம்வரகாண்டம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் - ௧௭௮.

## இரண்டாவது

# கலிதொடர்காண்டம்.

முந்தை மறைநூன் முடியெனலாந் தண்குருகூர்ச்
செந்தமிழ் வேத சிரமெனலா—நந்தும்
புழைக்கைக்கு நேயப் பொதுவர் மகளிர்க்கு
மழைக்கைக்கு முன்செல் லடி. (௧)

சேக்கர் நெடுவானிற் றிங்க ணிலாத்துளும்பி
யுக்க தெனச்சடைமே லும்பர்நீர்—மிக்கொழுகும்
வெள்ளத்தான் வெள்ளி நெடுங்கிரியான் மெய்யன்ப
ருள்ளத்தா னெங்கட் குளன். (௨)

தவளத் தனிக்குடையின் வெண்ணிழலுந் தையல்
குவளைக் கருநிழலுங் கொள்ளப்—பவளக்
கொழுந்தேறிச் செந்நெற் குலைசாய்க்கு நாடன்
செழுந்தேரி லேறினான் சென்று. (௩)

மங்கையர்கள் வாச மலர்கொய்வான் வந்தடையப்
பொங்கி யெழுந்த பொறிவண்டு—கொங்கோ
டெதிர்கொண் டணைவனபோ லேங்குவன முத்தின்
கதிர்கொண்ட பூண்முலையாய் காண். (௪)

பாவையர்கை தீண்டப் பணியாதார் யாவரே
பூவையர்கை தீண்டலுமப் பூங்கொம்பு—மேவியவர்
பொன்னடியிற் றாழ்ந்தனவே பூங்குழலாய் காணென்றான்
மின்னெடுவேற் கையான் விரைந்து. (௫)

மங்கை யொருத்தி மலர்கொய்வாள் வாண்முகத்தைப்
பங்கயமென் றெண்ணிப் படிவண்டைச்—செங்கையாற்
காத்தாளக் கைம்மலரைக் காந்தளெனப் பாய்தலுமே
வேர்த்தாளைக் காணென்றான் வேந்து. (௬)

புல்லும் வரிவண்டைக் கண்டு புனமயில்போற்
செல்லு மடந்தை சிலம்பவித்து—மெல்லப்போ
யம்மலரைக் கொய்யா தருந்தளிரைக் கொய்வாளைச்
செம்மலரிற் றேனே தெளி. (௭)

கோய்த மலரைக் கொடுங்கையி லேலணைத்து
மொய்குழலிற் சூட்டுவான் மூன்வுந்து—தையலாள்
பாதார விந்தத்தே சூட்டினான் பாவையிடைக்
காதார மின்மை யறிந்து. (௮)

ஏற்ற முலையார்க் கிளைஞ ரிடும்புலவித்
தோற்ற வமளியெனத் தோற்றுமாற்—காற்றசைப்ப
வுக்க மலரோ டுகுத்தவளை முத்தமே
யெக்கர் மணன்மே லிசைந்து. (௯)

அலர்ந்த மலர்சிந்தி யம்மலர்மேற் கொம்பு
புலர்ந்தசைந்து பூவணைமேற் புல்லிக்—கலந்தொசிந்த
புல்லென்ற கோலத்துப் பூவையரைப் போன்றதே
யல்லென்ற சோலை யழகு (௧௦)

கொங்கை முகத்தணையக் கூட்டிக் கொடுங்கையா
லங்கணைக்க வாய்நெகிழ்ந்த வாம்பற்பூக்—கொக்கவிழ்
வார்க்கின்ற கூந்தன் முகத்தை மதியென்று [தேன்
பார்க்கின்ற தென்னலாம் பார். (௧௧)

கொய்த குவளை கிழித்துக் குறுநுதன்மே
லெய்தத் தனிவைத்த வேய்ந்திழையாள் — வையத்தா
ருண்ணாக் கடுவிடத்தை யுண்ட வொருமூன்று
கண்ணானைப் போன்றனளே காண். (கஉ)

கொழுநன் கொழுந்தாரை நீர்வீசக் கூசிச்
செழுமுகத்தைத் தாமரைக்கே சேர்த்தாள் — கெழுமியவக்
கோமகற்குத் தானினைந்த குற்றங்க ளத்தனையும்
பூமகட்குச் சொல் லுவாள் போல். (கங)

பொய்தற் கமலத்தின் போதிரண்டைக் காதிரண்டிற்
பெய்து முகமூன்று பெற்றாள்போ — லெய்த
வருவாளைப் பாரென்றான் மாற்றாரை வென்று
செருவாளைப் பார்த்துவக்குஞ் சேய். (கச)

பொன்னுடைய வாசப் பொகுட்டு மலரலையத்
தன்னுடனே மூழ்கித் தனித்தெழுந்த — மின்னுடைய
பூணா டிருமுகத்தைப் புண்டரிக மென்றயிர்த்துக்
காணா தயர்வாளைக் காண். (கரு)

சிறக்கின்ற வாண்முகமுஞ் செங்காந்தட் கையான்
முறுக்குநெடு மூரிக் குழலுங் — குறிக்கிற்
கரும்பாம்பு வெண்மதியைக் கைக்கொண்ட காட்சி
யரும்பாம் பணைமுலையா யாம். (கசு)

சோர்புனலின் மூழ்கி யெழுவாள் சுடர்நுதன்மேல்
வார்குழலை நீக்கி வருந்தோற்றம் — பாராய்
விரைகொண் டெழுந்தபிறை மேகத் திடையே
புரைகின்ற தென்னலாம் பொற்பு. (கஎ)

செழுநீல நோக்கெறிப்பச் செங்குவளை கொய்வாண்
முழுநீல மென்றயிர்த்து முன்னர்க்—கழுநீரைக்
கொய்யாது போவாளைக் கோல்வளைக்குக் காட்டினான்
வையாரும் வேற்றடக்கை மன். (௧௮)

காவி பொருநெடுங்கட் காதலியுங் காதலனும்
வாவியு மாறுங் குடைந்தாடித்—தேவிற்
கழியாத சிந்தையுடன் கங்கைநதி யாடி
யொழியா துறைந்தா ருவந்து. (௧௯)

நறையொழுக வண்டுறையு நன்னகர்வாய் நாங்க
ளுறையு மிளமரக்கா வொக்கு—மிறைவளைக்கைச்
சிற்றிடையாய் பேரல்குற் றேமொழியாய் மென்முறுவற்
பொற்றொடியாய் மற்றிப் பொழில். (௨௦)

கன்னியர்தம் வேட்கையே போலுங் களிமழலை
தன்மணிவா யுள்ளே தடுமாற—மன்னவனே
யிக்கடிகா நீங்க ளுறையு மிளமரக்கா
வொக்குமதோ வென்று ளுயிர்த்து. (௨௧)

தொண்டைக் கனிவாய் துடிப்பச் சுடர்நுதன்மேல்
வெண்டரள மென்ன வியர்வரும்பக்—கெண்டைக்
கடைசிவப்ப நின்றாள் கழன்மன்னர் வெள்ளைக்
குடைசிவப்ப நின்றான் கொடி. (௨௨)

தங்கள் புலவித் தலையிற் றணித்திருந்த
மங்கை வதன மணியரங்கி—லங்கண்
வடிவாண்மேற் கால்வளைத்து வார்புருவ மென்னுங்
கொடியாடக் கண்டானோர் கூத்து. (௨௩)

சில்லரிக் கிண்கிணிமென் றெய்வமலர்ச் சீறடியைத்
தொல்லை மணிமுடிமேற் சூட்டினான்—வல்லை
முழுநீலக் கோதை முகத்தே மலர்ந்த
செழுநீல மாறாச் சிவப்பு. (௨௪)

அங்கைவேன் மன்ன னகல மெனுஞ்செறுவிற்
கொங்கையேர் பூட்டிக் குறுவியர்நீ—ரங்கடைத்துக்
காதல் வரம்பொழுக்கிக் காமப் பயிர்விளைத்தாள்
கோதையரின் மேலான கொம்பு. (௨௫)

வேரி மழைதுளிக்கு மேகக் கருங்கூந்தற்
காரிகையுந் தானும்போய்க் கண்ணுற்றான்—மூரித்
திரையேற மென்கிடங்கிற் சேலேற வாளை
கரையேறுங் கங்கைக் கரை. (௨௬)

சூதக் கனியூற லேற்ற சுருள்வாழை
கோதி னறவேற்குங் குப்பியென—மாதரா
ரையுற்று நோக்கு மகன்பொழில்சென் றெய்தினான்
வையுற்ற வேற்றானை மன். (௨௭)

வான்றோய நீண்டுயர்ந்த மாடக் கொடிநுடங்கத்
தான்றோன்று மற்றித் தடம்பதிதான்—வான்றோன்றி
வில்விளக்கே பூக்கும் விதர்ப்பனா டாளுடையா
னல்விளக்கே யெங்க ணகர். (௨௮)

பொய்கையும் வாசப் பொழிலு மெழிலருவிச்
செய்குன்று மாறுந் திரிந்தாடித்—தையலுட
னீரிரண்டாண் டெல்லை கழித்தா னடையலரைக்
கூறிரண்டாக் கொல்யானைக் கோ. (௨௯)

கோல நிறம்விளர்ப்பக் கொங்கை முகங்கருக
நீல நிறமயிர்க்கா னின்றெறிப்ப—நூலென்னத்
தோன்றாத நுண்மருங்கு றோன்றச் சுரிகுழலா
ளீன்றாள் குழவி யிரண்டு. (௩0)

ஆண்டிரண்டா றெல்லை யளவுந் திரிந்தேயுங்
காண்டகைய வெங்கலியுங் காண்கிலா—னீண்டபுகழ்ச்
செநநெறியாற் பார்காத்த செங்கோ னிலவேந்தன்
றன்னெறியால் வேறோர் தவறு. (௩௧)

சந்திசெயத் தாள்விளக்கத் தானின்மறுத் தான்கண்டு
புந்தி மகிழப் புகுந்துகலி—சிந்தையெலாந்
தன்வயமே யாக்கித் தமைய னுடனிருந்தான்
பொன்னசல மார்பற் புகைந்து. (௩௨)

நாராய ணாய நமவென் றவனடியிற்
சேராரை வெந்துயருஞ் சேர்ந்தாற்போற்—பாராளுங்
கொற்றவனைப் பார்மடந்தை கோமானை வாய்மைநெறி
கற்றவனைச் சேர்ந்தான் கலி. (௩௩)

நன்னெறியில் சூதா னளனைக் களவியற்றித்
தன்னரசு வாங்கித் தருகின்றேன்—மன்னவனே
போதுவா யென்னுடனே யென்றான் புலிநரகுக்
கேதுவாய் நின்றா னெடுத்து. (௩௪)

புன்னை நறுமலரின் பூந்தா திடையொதுங்குங்
கன்னி யிளமேதிக் காற்குளம்பு—பொன்னுரைத்த
கல்லேய்க்கு நாடன் கவறாடப் போயினான்
கொல்லேற்றின் மேலேறிக் கொண்டு. (௩௫)

வெங்கட் சினவிடையின் மேலேறிக் காலேறிக்
கங்கைத் திரைநீர் கரையேறிச்—செங்கதிர்ப்பைம்
பொன்னெழியப் போதும் புறம்பணைசூழ் நன்னாடு
பின்னொழியப் போந்தான் பெயர்ந்து. (௩௬)

அடற்கதிர்வேன் மன்ன னவனேற்றின் முன்போ
யெடுத்தகொடி யென்ன கொடியென்—மிடற்குது
வெல்லுங் கொடியென்றான் வெங்கலியா லங்கவன்மேற்
செல்லுங் கொடியோன் றெரிந்து. (௩௭)

என்றோ மிதுவாயின் மெய்ம்மையே யெம்மோடு
வான்றோய் மடற்றெங்கின் வான்றேற—றான்றேக்கி
மீதாடி வாளைவயல் வீழ்ந்துழக்கு நன்னாடன்
சூதாட வென்றான் றுணிந்து. (௩௮)

காதல் கவறாடல் கள்ளுண்டல் பொய்ம்மொழிதல்
சீதன் மறுத்த விவைகண்டாய்—போதிற்
சினையாமை வைகுந் திருநாடா செம்மை
நினையாமை பூண்டார் நெறி (௩௯)

அறத்தைவேர் கல்லு மருநரகிற் சேர்க்குந்
திறத்தையே கொண்டருளைத் தேய்க்கு—மறத்தையே
பூண்டுவிரோ தஞ்செய்யும் பொய்ச்சூதை மிக்கோர்க
ளுண்டுவரோ வென்றார் தெரிந்து. (௪௦)

உருவழிக்கு முண்மை யுயர்வழிக்கும் வண்மைத்
திருவழிக்கு மானஞ் சிதைக்கு—மருவு
மொருவரோ டன்பழிக்கு மொன்றல்ல சூது
பொருவரோ தக்கோர் புரிந்து. (௪௧)

ஆயம் பிடித்தாரு மல்லற் பொதுமகளிர்
நேயம் பிடித்தாரு நெஞ்சிடையே—யாயம்
பிடித்தாரின் வேறல்ல ரென்றுரைப்ப தன்றே
வடித்தாரின் னூலோர் வழக்கு. (௪௨)

தீது வருக நலம்வருக சிந்தையாற்
சூது பொரவிசைந்து சொல்லினோம்—யாதும்
விலக்கலிர்நீ ரென்றான் வராமேலற மேதி
கலக்கலைநீர் நாடன் கனன்று. (௪௩)

நிறையில் கவறாட னீநினைந்தை யாகிற்
றிறையிற் கதிர்முத்தஞ் சிந்துந்—துறையிற்
கரும்பொடியா மள்ளர் கடாவடிக்கு நாடா
பொரும்படியா தென்றானிப் போது. (௪௪)

விட்டொளிர்வில் வீசி விளங்குமணிப் பூணார
மொட்டினே னுன்பணைய மோதென்ன—மட்டவிழ்தார்
மல்லேற்ற தோளானும் வான்பணைய மாகத்தன்
கொல்லேற்றை வைத்தான் குறித்து. (௪௫)

காரையுங் கூந்தலார் காரிகைமேற் காதலித்த
தாரையுந் தோளான் றனிமனம்போ—னேரே
தவறாய்ப் புரண்ட தமையனொடுங் கூடிக்
கவறாய்ப் புரண்டான் கலி. (௪௬)

வைத்த மணியாரம் வென்றேன் மறுபலகைக்
கொத்த பணைய முரையென்ன—வைத்தநிதி
நூறு யிரத்திரட்டி நூறுநூ றாயிரமும்
வேறாகத் தோற்றானவ் வேந்து. (௪௭)

பல்லா யிரம்பரியும் பத்துநூ றாயிரத்துச்
சொல்லார் மணித்தேருந் தோற்றதற்பின் — வில்லாட்கண்
முன்றோற்று வானின் முகிறோற்கு மால்யானை
பின்றோற்றுத் தோற்றான் பிடி. (சஅ)

சாதுரங்கம் வென்றேன் றரும்பணைய மேதென்ன
மாதுரங்கம் பூணு மணித்தோரான் — சூதரங்கிற் [குழற்
பாவையரைச் செவ்வழியாழ்ப் பண்ணின்மொழிப் பின்னு
பூவையரைத் தோற்றான் பொருது. (சகூ)

கற்பின் மகளிர்பா னின்றுந் தகைக்கவட்டின்
விற்கு மகளிர்பான் மீண்டாற்போ — னிற்கு
நெறியானை மெய்ம்மைவாய் நின்றானை நீங்கிச்
சிறியானைச் சேர்ந்தா டிரு. (ருO)

மனைக்குரியா ளன்றே வருந்துயரந் தீர்ப்பார்
சினைச்சங்கின் வெண்டலையைத் தேனு — னனைக்குங்
குவளைப் பனைப்பைந்தாட் குண்டுநீர் நாடா
விவளைப் பணயந்தா வின்று. (ருக)

இனிச்சூ தொழிக்தோ மினவண்டு கிண்டிக்
கனிச்சூத வார்பொழிலின் கண்ணே — பனிச்சூதப்
பூம்போ தவிழ்க்கும் புனனாடன் பொன்மகளே
நாம்போது மென்றா னளன். (ருஉ)

மென்காற் சிறையன்னம் வீற்றிருந்த மென்மலரைப்
புன்காகங் கொள்ளத்தான் போனாற்போற் — றன்கால்
பொடியாடத் தேவியொடும் போயினா னன்றே
கொடியானுக் கப்பார் கொடுத்து. (ருங)

இ-ள் :—இருபொருட்கண் ஒருதலை பற்றிவரும் ஒடுச்சொல் அவ்விரு பொருளினும் உயர்ந்த பொருளின் வழியை உடைத்து எ-று.

வழி என்றது அப் பொருளின் வழியாகிய பொருள் என்று கொள்க. உயர்வு என்பதைச் சிறப்பென்று கொள்க. கொள்ளவே, அத்தொழிற்குச் சிறவாத பொருட்கண் வரும் என்றவாறும். 5

உ-ம்.—அமைச்சரோடு இருந்தான் அரசன். இருந்தான் என்னும் தொழிற்குச் சிறந்தான் அரசன் ஆதலின், சிறவாத அமைச்சர் மேல் ஒடு வந்தது. அரசனொடு இருந்தார் அமைச்சர் 10 என்ற வழி இருந்தார் என்னும் தொழிற்குச் சிறந்தார் அமைச்சர் ஆதலின் ஒடு அரசர்மேல் வந்தது. இஃது உடனிகழ்ச்சி ஆகலான் அத்தொழிற்கு இருவரும் சிறந்தார் எனிற் குற்றம் என்னையெனின், அரசரோடு இருந்தார் அமைச்சர், அவரை 15 மந்திரம் இருமின் என்றார் என்றவழி, அச்சுட்டு ஈரிடத்தும் செல்லாமையாலும், தொழில் முடியும் பெயரே சிறப்புடைய தெனவுங் கொள்க. இனிச்சிறப்புடைய பொருண்மேல் ஒடு வரு மெனப் பெருள் உரைத்தார் உளர் * ஆயினும், இப்பொருள் பாணினியார்க்கும் ஒக்கும். [எ] 20

88. மூன்றனும் ஐந்தனும் தோன்றக் கூறிய
ஆக்கமொடு புணர்ந்த ஏதுக் கிளவி
நோக்கோ ரனைய என்மனார் புலவர்.

மூன்றாவதற்கும் ஐந்தாவதற்கும் உரியதோர் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :—மூன்றாவதன்கண்ணும் ஐந்தாவதன்கண்ணும் 25 விளங்க எடுத்தோதப்பட்ட ஆக்கம் என்னும் சொல்லோடு தொடர்புபட்ட ஏதுக்கிளவி, இருவகை வேற்றுமைக்கும் நோக்கு ஒரு தன்மைய. எ-று.

உ-ம் :—வாணிகத்தான் ஆயினான்; வாணிகத்தின் ஆயினான் என இருவாற்றானும் வரும்.

* இளம் பூரணர்.

அறையும் பறையரவங் கேட்டழிந்து நைந்து
பிறைநுதலாள் பேதைமையை நோக்கி—முறுவலியா
விந்நகர்க்கீ தென்பொருட்டா வந்த தெனவுரைத்தான்
மன்னகற்றுங் கூரிலைவேன் மன். (௬௰)

தன்வாயின் மென்மொழியே தாங்கினு னேங்குநகர்ப்
பொன்வாயில் பின்னுகப் போயினுன்—முன்னுளிற்
பூமகளைப் பாரிமெனுடும் புல்லினுன் றன்மகனைக்
கோமகளைத் தேவியொடுங் கொண்டு. (௬க)

கோற்றவன்பாற் செல்வாரைக் கொல்வான் முரசறைந்து
வெற்றியொடு புட்கரனும் வீற்றிருப்ப—முற்று
மிழவு படுமோபோ வில்லங்க டோறுங்
குழவிபா லுண்டிலவே கொண்டு. (௬உ)

சந்தக் கழற்று மரையுஞ் சதங்கையணி
பைந்தளிரு நோவப் பதைத்துருகி—யெந்தாய்
வடந்தோய் களிற்றுய் வழியான வெல்லாங்
கடந்தோமோ வென்றுர் கலுழ்ந்து. (௬௩)

தூயதன் மக்க டியர்நோக்கிச் சூழ்கின்ற
மாய விதியின் வலிநோக்கி—யாதுந்
தெரியாது சித்திரம்போ னின்றிட்டான் செம்மை
புரிவான் றுயராற் புலர்ந்து. (௬௪)

காத லிருவரையுங் கொண்டு கடுஞ்சுரம்போக்
கேத முடைத்திவரைக் கொண்டுநீ—மாதராய்
வீமன் றிருநகர்க்கே மீளென்றுன் விண்ணவர்முன்
ரூமம் புனைந்தாளைத் தான். (௬௫)

குற்றமில் காட்சிக் குதலைவாய் மைந்தரையும்
பெற்றுக் கொளலாம் பெறலாமோ—கொற்றவனே
கோக்கா தலனைக் குலமகளுக் கென்றுரைத்தா
னோக்கான் மழைபொழியா நொந்து. (௬௬)

கைதவந்தா னீக்கிக் கருத்திற் கறையகற்றிச்
செய்தவந்தா மெத்தனையுஞ் செய்தாலு—மைதீர்
மகப்பெறா மானுடர்கள் வானவர்த மூர்க்குப்
புகப்பெறார் மாதராய் போந்து. (௬௭)

பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனுமற்
றென்னுடைய ரேனு முடையரோ—வின்னடிசிற்
புக்களையுந் தாமரைக்கைப் பூநாறுஞ் செய்யவாய்
மக்களையிங் கில்லா தவர். (௬௮)

சொன்ன கலையின் றுறையனைத்துந் தோய்ந்தாலு
மென்ன பயனுடைத்தா மின்முகத்து—முன்னங்
குறுகுதலைக் கிண்கிணிக்காற் கோமக்கள் பால்வாய்ச்
சிறுகுதலை கேளாச் செவி. (௬௯)

போற்றரிய செல்வம் புனளுட் டொடும்போகத்
தோற்றமையும் யாவர்க்குந் தோறறாதே—யாற்றலா
லெம்பதிக்கே போந்தருளு கென்றா ளெழிற்கமலச்
செம்பதிக்கே வீற்றிருந்த தேன். (௭௰)

சினக்கதிர்வேற் கண்மடவாய் செல்வர்பாற் சென்றீ
யெனக்கென்னு மிம்மாற்றங் கண்டாய்—தனக்குரிய
தானந் துடைத்துத் தருமத்தை வேர்பறித்து
மானந் துடைப்பதோர் வாள். (௭௧)

மன்னராய் மன்னர் தமையடைந்து வாழ்வெய்தி
யின்னமுதந் தேக்கி யிருப்பாரேற்—சொன்ன
பெரும்பே டிகளலரேற் பித்தரே யன்றோ
வரும்பேடை மானே யவர். (எஉ)

சேமகோலா யுன்றன் றிருவுள்ள மீதாயி
னெங்கோன் விதர்ப்ப னெழினகர்க்கே—நங்கோலக்
காதலரைப் போக்கி யருளென்றாள் காதலருக்
கேதிலரைப் போல வெடுத்து. (எந)

பேதை பிரியப் பிரியாத பேரன்பின்
காதலரைக் கொண்டுபோய்க் காதலிதன்—றாதைக்குக்
காட்டுநீ யென்றான் கலங்காத வுள்ளத்தை
வாட்டுநீர் கண்ணிலே வைத்து. (எச)

தந்தை திருமுகத்தை நோக்கித் தமைப்பயந்தா
ளிந்து முகத்தை யெதிர்நோக்கி—யெந்தம்மை
வேறாகப் போக்குதிரோ வென்றார் விழிவழியே
யாறாகக் கண்ணீ ரழுது. (எரு)

அஞ்சனந்தோய் கண்ணி லருவிநீ ராங்கவர்க்கு
மஞ்சனநீ ராக வழிந்தோட—நெஞ்சுருகி
வல்லிவிடா மெல்லிடையாண் மக்களைத்தன் மார்போடும்
புல்லிவிடா நின்றாள் புலர்ந்து. (எசு)

இருவ ருயிரு மிருகையான் வாங்கி
யொருவன் கொண்டேகுவா னொத்து—வருமறையோன்
கோமைந்த னோடிளைய கோதையைக்கொண் டேகினான்
வீம னகர்க்கே விரைந்து. (எஎ)

காத லவர்மேலே கண்ணோட விண்ணோடு
மூதை யெனநின் றுயிர்ப்போட—யாது
முரையாடா துள்ள மொடுங்கினான் வண்டு
விரையாடுந் தாரான் மெலிந்து. (எஅ)

சேலுற்ற வாவித் திருநாடு பின்னொழியக்
காலிற்போய்த் தேவியொடுங் கண்ணுற்றான்—ஞாலஞ்சேர்
கள்ளிவே கத்தரவின் கண்மணிக டாம்பொடியாத்
துள்ளிவே கின்ற சுரம். (எகூ)

கன்னிறத்த சிந்தைக் கலியுமவன் முன்பாகப் [றிக்கே
பொன்னிறத்த புள்வடிவாய்ப் போந்திருந்தான்—நன்னெ
யஞ்சிப்பா ரீந்த வரசனையுந் தேவியையும்
வஞ்சிப்பான் வேண்டி வனத்து. (அ0)

தேன்பிடிக்குந் தண்டுழாய்ச் செங்கட் கருமுகிலை
மான்பிடிக்கச் சொன்ன மயிலேபோற்—றான்பிடிக்கப்
பொற்புள்ளைப் பற்றித்தா வென்றாள் புதுமழலைச்
சொற்கிள்ளை வாயா டொழுது. (அக)

போற்புள் ளதனைப் பிடிப்பா னளன்புகுதக்
கைக்குள்வரு மாபோற் கழன்றோடி—யெய்க்கு
மிளைக்குமா போல விருந்ததுகண் டன்றே
வளைக்குமா றெண்ணினான் மன். (அஉ)

கோற்றக் கயற்கட் கொடியே யிருவேமு
மொற்றைத் துகிலா லுடைபுனைந்து—மற்றிந்தப் [ன்
பொற்றுகிலாற் புள்வளைக்கப் போதுவோ மென்றுரைத்தா
பற்றகலா வுள்ளம் பரிந்து. (அங)

எற்றித் திரைபொரநொந் தேறி யிளமணலிற்
பற்றிப் பவளம் படர்நிழற்கீழ்—முத்தீன்று
வெள்வளைத்தா யோடுநீர் வேலைத் திருநாடன்
புள்வளைத்தா னாடையாற் போந்து. (௮௪)

கூந்த விளங்குயிலுங் கோமானுங் கொண்டணைத்த
பூந்துகில்கொண் டந்தரத்தே போய்நின்று—வேந்தனை
நன்னாடு தோற்பித்தோ னானேகா ணென்றதே
பொன்னோடு மானிறத்த புள். (௮௫)

காவிபோற் கண்ணிக்குங் கண்ணியந்தோட் காளைக்கு
மாவிபோ லாடையுமொன் றானதே—பூவிரியக்
கள்வேட்டு வண்டுழலுங் கானத் திடைக்கனகப்
புள்வேட்டை யாதரித்த போது. (௮௬)

அறம்பிழைத்தார் பொய்த்தா ரருள்சிதைத்தார் மானத்
திறம்பிழைத்தார் தெய்வ மிகழ்ந்தார்—புறங்கடையிற்
சென்றார் புகுநரகஞ் சேர்வாய்கொ லென்றழியா
நின்றாள் விதியை நினைந்து. (௮௭)

வையந் துயருழப்ப மாயம் பலசூழ்ந்து
தெய்வங் கெடுத்தாற் செயலுண்டோ—மெய்வகையே
சேர்ந்தருளி நின்றதனிச் செங்கோலா யிங்கொழியப்
போந்தருளு கென்றாள் புலர்ந்து. (௮௮)

அந்த நெடுஞ்சுரத்தின் மீதேக வாங்கழலும்
வெந்தழலை யாற்றுவான் மேற்கடற்கே—யெந்தை
குளிப்பான்போற் சென்றடைந்தான் கூரிருளாற் பாரை
யொளிப்பான்போற் பொற்றே ருடன். (௮௯)

பானு நெடுந்தேர் படுகடலிற் பாய்ந்ததற்பின்
கான வடம்பின் கவட்டிலைகண் — மானின்
குளம்பேய்க்கு நளனுடன் கோதையொடுஞ் சென்றா
னிளம்பேய்க்குந் தோன்றா விருள். (௩௰)

எங்காம் புகலிடமென் றெண்ணி யிருள்வழிபோய்
வெங்கா னகந்திரியும் வேலைதனி — லங்கேயோர்
பாழ்மண் டபங்கண்டான் பால்வெண் குடைநிழற்கீழ்
வாழ்மண் டபங்கண்டான் வந்து. (௩௧)

மூரி யிரவும்போய் முற்றிருளாய் மூண்டதாற்
சாரு மிடமற்றுத் தானில்லை — சோர்கூந்தன்
மாதராய் நாமிந்த மண்டபத்தே கண்டுயிலப்
போதரா யென்றான் புலர்ந்து. (௩௨)

வைய முடையான் மகரயாழ் கேட்டருளுந்
தெய்வச் செவிகொதுகின் சில்பாட — லிவ்விரவிற்
கேட்டவா வென்றழுதாள் கெண்டையங்க ணீர்சோரத்
தோட்டவார் கோதையாள் சோர்ந்து. (௩௩)

பண்டை வினைப்பயனைப் பாரிடத்தி லார்கடப்பார்
கொண்ட னிழலிற் குழைதடவுங் — கெண்டை
வழியனீ ரென்றான் மனநடுங்கி வெய்துற்
றழியனீ யென்றா னரசு. (௩௪)

விரைமலர்ப்பூ மெல்லணையு மெய்காவல் பூண்ட
பரிசனமும் பள்ளி யறையு — மரைசேநான்
காணேனிங் கென்னாக் கலங்கினாள் கண்பனிப்பப்
பூணேர் முலையாள் புலர்ந்து. (௩௫)

தீய வனமுந் துயின்று திசைதுயின்று
பேயுந் துயின்றதாற் பேர்யாம—நீயுமினிக்
கண்மேற் றுயில்கை கடனென்றான் கைகொடுத்து
மண்மேற் றிருமேனி வைத்து. (கசா)

புன்கண்கூர் யாமத்துப் பூமிமேற் றான்படுத்துத்
தன்கண் டுயில்வாளைத் தான்கண்டு—மென்கண்
பொடியாதா லுள்ளாவி போகாதா னெஞ்சம்
வெடியாதா லென்றான் விழுந்து. (கூஎ)

முன்றிறனின் மேற்படுக்க மூன்றா னையுமின்றி
யின்று துயில விறைவனுக்கே—யென்றனது
கைபுகுந்த தென்னுடைய கால்புகுந்த தென்றழுதாள்
மைபுகுந்த கண்ணீர் வர. (கூஅ)

வீமன் றிருமடந்தை விண்ணவரும் பெற்றிலாத்
தாம மெனக்களித்த தையலால்—யாமத்துப்
பாரே யணையாப் படைக்கண் டுயின்றாண்மற்
றாரே துயரடையா ராங்கு. (கூகூ)

பெய்ம்மலர்ப்பூங் கோதை பிரியப் பிரியாத
செம்மை யுடைமனத்தன் செங்கோலான்—பொய்ம்மை
விளக்கினா னெஞ்சத்தை வேறாக்கி நின்று
கலக்கினான் வஞ்சக் கலி. (க00)

வஞ்சக் கலிவலியான் மாகத் தராவளைக்குஞ்
செஞ்சுடரின் வந்த கருஞ்சுடர்போல்—விஞ்ச
மதித்ததேர்த் தானை வயவேந்த னெஞ்சத்
துதித்ததே வேறா ருணர்வு. (க0க)

காரிகைதன் வெந்துயரங் காணும னீத்தந்தக்
கூரிருளிற் போவான் குறித்தெழுந்து—நேரே
யிருவர்க்கு மோருயிர்போ லெய்தியதோ ராடை
யரிதற் கவனினைந்தா னங்கு. (௧0௨)

எண்ணிய வெண்ண முடிப்ப விகல்வேந்தன்
கண்ணி யதையறிந்து காய்கலியும்—பண்ணினுக்குக்
கேளான தேமொழியை நீக்கக் கிளரொளிசேர்
வாளாய் மருங்கிருந்தான் வந்து (௧0௩)

ஒற்றைத் துகிலு முயிரு மிரண்டாக
முற்றுந்த னன்பை முதலோடும்—பற்றி
யரிந்தா னரிந்திட் டவணிலைமை நெஞ்சிற்
றெரிந்தா னிருந்தான் றிகைத்து. (௧0௪)

போயொருகான் மீளும் புகுந்தொருகான் மீண்டேகு
மாயர் கொணர்ந்த வடுபாலின்—றோயல்
கடைவார்தங் கைபோல வாயிற்றே காலன்
வடிவாய வேலான் மனம். (௧0௫)

சிந்துரத்தாட் டெய்வ முனிவன் றெரிந்துரைத்த
மந்திரத்தாற் றம்பித்த மாநீர்போன்—முந்த
வொலித்ததேர்த் தானை யுயர்வேந்த னெஞ்சம்
வலித்ததே தீக்கலியான் வந்து. (௧0௬)

தீக்கா னகத்துறையுந் தெய்வங்காள் வீமன்றன்
கோக்கா தலியைக் குறிக்கொண்மின்—னீக்காத
காதலன்பு மிக்காளைக் காரிருளிற் கைவிட்டின்
றேதிலன்போற் போகின்றேன் யான். (௧0௭)

ஏந்து மிளமுலையா ளின்னுயிருந் தன்னருளும்
பூந்துகிலும் வேறாகப் போயினான்—றீந்தேன்
றொடைவிரவு நாண்மாலை சூட்டினா டன்னை
யிடையிருளிற் கானகத்தே யிட்டு. (க0அ)

தாருவெனப் பார்மேற் றருசந் திரன்சுவர்க்கி
மேருவரைத் தோளான் விரவார்போற்—கூரிருளிற்
செங்கா னகஞ்சிதைத்தைத் தேவியைவிட் டேகினான்
வெங்கா னகந்தனிலே வேந்து. (க0௯)

நீல மளவே நெகிழ நிரைமுத்தின்
கோல மலரின் கொடியிடையாள்—வேல்வேந்தே
யெங்குற்றா யென்னா வினவளைக்கை நீட்டினா
ளங்குத்தான் காணா தயர்ந்து. (கக0)

உடுத்த துகிலரிந்த தொண்டொடியாள் கண்டு
மடுத்த துயிலான் மறுகி—யடுத்தடுத்து
மன்னே யெனவழைப்பாள் மற்றுமவ னைக்காணா
தென்னேயிஃ தென்னென் றெழுந்து. (ககக)

வெய்ய தரையென்று மெல்லமளி யைத்தடவிக்
கையரிக்கொண் டவ்விடத்துங் காணாமை—யையகோ
வென்னப்போய் வீழ்ந்தா ளினமேதி மென்கரும்பைத்
தின்னப்போ நாடன் றிரு. (கக௨)

அழல்வெஞ் சிலைவேட னம்புருவ வாற்றா
துழலுங் களிமயில்போ லோடிக்—குழல்வண்
டெழுந்தோட வீழ்ந்தா ளிருகுழைமேற் கண்ணீர்க்
கொழுந்தோட வீமன் கொடி. (ககங)

வான்முகிலு மின்னும் வறுநிலத்து வீழ்ந்ததுபோற்
றானுங் குழலுந் தனிவிழ்ந்தா—ளேனங்
குளம்பான் மணிகிளைக்குங் குண்டுநீர் நாட
னிளம்பாவை கைதலையே விட்டு. (ககச)

தைய றுயர்க்குத் தரியாது தஞ்சிறகாங்
கையான் வயிறலைத்துக் காரிருள்வாய்—வெய்யோனை
வாவுபரித் தேரேறி வாவென் றழைப்பனபோற்
கூவினவே கோழிக் குலம். (ககரு)

வான நெடுவீதி செல்லு மணித்தேரோன்
றான மடந்தைக்குத் தார்வேந்தன்—போனநெறி
காட்டுவான் போலிருள்போய்க் கைவாங்கக் கானூடே
நீட்டுவான் செங்கரத்தை நின்று. (ககசு)

செய்தபிழை யேதென்னுந் தேர்வேந்தே யென்றழைக்கு
மெய்துதுய ரக்கரைகா ணேனென்னும்—பையவே
யென்னென்று தென்னென்று மிக்கானின் விட்டேகு
மன்னென்று வாடு மயர்ந்து. (ககஎ)

அல்லியந்தார் மார்ப னடித்தா மரையவட
னல்லுயிரு மாசையும்போ ஞறுதலு—மல்லுருதோள்
வேந்தனே யென்று விழுந்தாள் விழிவேலை
சாய்ந்தநீர் வெள்ளத்தே தான். (ககஅ)

வெறித்த விளமான்காண் மென்மயில்கா ளிந்த
நெறிக்க ணெடிதூழி வாழ்வீர்—பிறித்தெம்மைப்
போனாரைக் காட்டுதிரோ வென்றுப் புலம்பினாள்
வானாடர் பெற்றிலா மான். (ககக)

வேட்ட கரியை விழுங்கிப் பெரும்பசியான்
மோட்டு வயிற்றரவு முன்றோன்ற—மீட்டதனை
யோரா தருகணைந்தா ளுண்டே னறற்கூந்தற்
போரார் விழியாள் புலர்ந்து. (கஉ0)

அங்கண் விசும்பி னவிர்மதிமேற் சென்றடையும்
வெங்க ணரவுபோன் மெல்லியலைக்—கொங்கைக்கு
மேலெல்லாந் தோன்ற விழுங்கியதே வெங்கானின்
பாலெல்லாந் தீயுமிழும் பாம்பு. (கஉக)

வாளரவின் வாய்ப்பட்டு மாயாமுன் மன்னவநின்
றாளடைந்து வாழுந் தமியேனைத்—தோளான்
விலக்காயோ வென்றழுதாள் வெவ்வரவின் வாய்க்கிங்
கிலக்காகி நின்றா ளெடுத்து. (கஉஉ)

வென்றிச் சினவரவின் வெவ்வா யிடைப்பட்டு
வன்றுயராற் போயாவி மாள்கின்றே—னின்றன்
றிருமுகநான் காண்கிலேன் றேர்வேந்தே யென்றாள்
பொருமுகவேற் கண்ணாள் புலர்ந்து. (கஉ௩)

மற்றொடுத்த தோள்பிரிந்து மாயாத வல்வினையேன்
பெற்றெடுத்த மக்காள் பிரிந்தேகுங்—கொற்றவனை
நீரேனுங் காண்குதிரோ வென்றழுதா ணீள்குழற்குக்
காரேனு மொவ்வாள் கலுழ்ந்து. (கஉ௪)

அடையுங் கடுங்கானி லாடரவின் வாய்ப்பட்
டுடையுமுயிர் நாயகனே யோகோ—விடையெனக்குத்
தந்தருள்வா யென்னாத்தன் றாமரைக்கை கூப்பினாள்
செந்துவர்வாய் மென்மொழியா டேர்ந்து. (கஉ௫)

உண்டோ ரழுகுரலென் றெற்றி வருகின்ற
வெண்டோடன் செம்பங்கி வில்வேடன்—கண்டான்
கழுகுவாழ் கானகத்துக் காரரவின் வாயின்
முழுகுவா டெய்வ முகம். (கஉசு)

வெய்ய வரவின் விடவாயி னுட்பட்டே
னையன்மீ ருங்கட் கபயம்யா—னுய்ய
வருளீரோ வென்று வரற்றினா ளஞ்சி
யிருளீரும் பூணா ளெடுத்து. (கஉஎ)

சங்க நிதிபோற் றருசந் திரன்சுவர்க்கி
வெங்கலிவாய் நின்றுலக மீட்டாற்போன்—மங்கையைவெம்
பாம்பின்வாய் நின்று பறித்தான் பகைகடிந்த
காம்பின்வாய் வில்வேடன் கண்டு. (கஉஅ)

ஆருயிரு நானு மழியாம லேயாவிப்
பேரரவின் வாயிற் பிழைப்பித்தாய்—தேரி
னிதற்குண்டோ கைம்மா றெனவுரைத்தாள் வென்றி
விதர்ப்பன்றான் பெற்ற விளக்கு. (கஉகூ)

பிந்து நுதலி யெழிநோக்கி யேதோதன்
சிந்தை கருதிச் சிலைவேட—பைந்தொடிநீ
போதுவா யென்னுடனே யென்றான் புலைநாகுக்
கேதுவாய் நின்றா னெடுத்து. (கஙo)

வேட னழைப்ப விழிபதைத்து வெய்துயிரா
வாடன் மயில்போ லலமரா—வோடினா
டேறலா மாகச் சுரிகுழல்வேற் கண்ணினீர்
ஆறெலா மாக வழுது. (கஙக)

தீக்கட் புலிதொடரச் செல்லுஞ் சிறுமான்போ
லாக்கை தளர வலமந்து—போக்கற்றுச்
சீறா விழித்தாள் சிலைவேட னவ்வளவி
னீறாய் விழுந்தா னிலத்து. (கஙஉ)

வண்டமிழ்வா ணர்ப்பிழைத்த வான்குடிபோ றீத்தழன்மீ
மண்டு கொடுஞ்சுரத்தோர் மாட்டிருந்து—பண்டையுள
வாழ்வெல்லாந் தானினைந்து மற்றழுதாண் மன்னிழைத்த
தாழ்வெல்லாந் தன்றலைமேற் றந்து. (கஙஙு)

அவ்வளவி லாதிப் பெருவழியி லாய்வணிக
னிவ்வளவு தீவினையே னென்பாடன்—மெய்வடிவைக்
கண்டானை யுற்றான் கமலமயி லேயென்றா
னுண்டாய வெல்லா முணர்ந்து. (கஙச)

எக்குலத்தா யார்மடந்தை யாதுன்னூர் யாதுன்பேர்
தெக்குருகி நீயழுதற் கென்னிமித்த—மைக்குழலாய்
கட்டுரைத்துக் காணென்றான் கார்வண்டு காந்தாரம்
விட்டுரைக்குந் தார்வணிகர் வேந்து. (கஙரு)

முன்னை வினையின் வலியான் முடிமன்ன
னென்னைப் பிரிய விருங்கானி—லன்னவனைக்
காணா தழுகின்றே னென்றாள் கதிரிமைக்கும்
பூணாரம் பூண்டாள் புலர்ந்து. (கஙசா)

சேதி நகர்க்கே திருவைச் செலவிட்டப்
போதிற் கொடைவணிகன் போயினான்—னீதி
கிடத்துவான் மன்னவர்தங் கீர்த்தியினைப் பார்மே
னடத்துவான் வட்டை நடந்து. (கஙஎ)

அற்ற துயிலு மறுதொழுகு கண்ணீரு
முற்ற துயரு முடையளாய்—மற்றொருத்தி
நின்றாளைக் கண்டே நிலவேந்தன் பொற்றேவி
யென்றார் மடவா ரெடுத்து. (கஙஅ)

போயகலா முன்னம் புனையிழையாய் பூங்குயிலை
யாய மயிலை யறியவே—நீயேகிக்
கொண்டுவா வென்றுடன் கொவ்வைக் கனிதிறந்து
வண்டுவாழ் கூந்தன் மயில். (கஙகூ)

ஆங்கவளு மேக வரசன் பெருந்தேவி
பூங்கழலின் மீதே புரண்டழுதா—டாங்கு
மினவளையா யுற்றதுய ரெல்லா மெனது
வினைவழிகா ணென்றாண் மெலிந்து. (கச0)

அந்தா மரையி லவளேயென் றையுற்றுச்
சிந்தா குலமெனக்குத் தீராதாற்—பைந்தொடியே
யுள்ளவா றெல்லா முரையென்றா ளொண்மலரின்
கள்ளவார் கூந்தலாள் கண்டு. (கசக)

என்னைத் தனிவனத்திட் டெங்கோன் பிரிந்தேக
வன்னவனைக் காணு தலமருவே—னிந்நகர்க்கே
வந்தே னிதுவென் வரவென்றாள் வாய்புலராச்
செந்தேன் மொழிபதறச் சேர்த்து. (கசஉ)

உன்றலைவன் றன்னை யொருவகையா னாடியே
தந்து விடுமளவுந் தாழ்குழலா—யென்றனுட
னிங்கே யிருக்க வினிதென்றா ளேந்திழையைக்
கொங்கேயுந் தாராள் குறித்து. (கசங)

ஈங்கிவளிவ் வாறிருப்ப வின்னலுழந் தேயேகிப்
பூங்குயிலும் போர்வேற் புரவலனும்—யாங்குற்றார்
சென்றுணர்தி யென்று செலவிட்டான் வேதியனைக்
குன்றுறழ்தோள் வீமன் குறித்து. (௧௪௪)

ஓடும் புரவித்தேர் வெய்யோ னொளிசென்று
நாடு மிடமெல்லா நாடிப்போய்க்—கூடினான்
போதிற் றிருநாடும் பொய்கைத் திருநாடாஞ்
சேதித் திருநாடு சென்று. (௧௪௫)

தாமஞ்சே ரோதித் தமயந்தி நின்றாளை
யாமென் றறியா வருமறையோன்—வீமன்
கொடிமேல் விழுந்தழுதான் கொம்புமவன் செம்பொ
னடிமேல் விழுந்தழுதா ளழுது. (௧௪௬)

மங்கை விழிநீர் மறையோன் கழல்கழுவ
வங்கவன்றன் கண்ணீ ரவளுடன்மேற்—பொங்கக்
கடல்போலுங் காதலார் கையற்றார் தங்க
ளுடல்போலு மொத்தா ருயிர். (௧௪௭)

மாரி பொருகூந்தன் மாதராய் நீபயந்த
காரிகைதான் பட்டதுயர் கண்டாயோ—சோர்குழலும்
வேணியாய் வெண்டுகிலும் பாதியாய் வெந்துயருக்
காணியாய் நின்றா ளயர்ந்து. (௧௪௮)

தன்மக ளாவ தறியாத் தடுமாறாப் [ரைக்
பொன்வடிவின் மேலழுது போய்வீழ்ந்தாள்—மென்மல
கோதிப்போய் மேதி குருகெழுப்புந் தண்பணைசூழ்
சேதிக்கோன் றேவி திகைத்து. (௧௪௯)

களிப்பு மீக்கூர்ந்து செருக்கு மேற்கொண்டு புல்லறிவாளர் இருப்பாராதலால் நல்ல உறுதிகளை நல்லோர் நயந்து சொல்லினும் அவர் உணர்ந்து கொள்ளார். இவ்வுண்மை இரணியன், இராவணன், சூரபன்மன் முதலாயினர்கட் காணலாம். தன் அண்ணன் அல்வழியில் மிதந்ததை யறிந்து சிங்கமுகன் அகம் மிக வருந்தி எம்பெருமான் பெருமையை எவ்வளவோ எடுத்துக்காட்டி ஏதுவோடு அறிவுறுத்தியும் அவன் அறியமாட்டானாய் இவனை அவமதித்து அறிவில்லாதவனே யென்று இழித்துப் பெரிதும் வைதான்; அறிவுகாட்டப்புகுந்த இவன் மிகவும் நொந்து புல்லறிவின் தீமையை யஞ்சினான். அதுபொழுது இவன் உரைத்தவற்றுள் சில இதனடியில் வருகின்றன.

உறுதியை உரைத்தனன் உணர் விலாதவன்
வறிதெனை இகழ்ந்தனன் வருவதோர்கிலன்
இறும்வகை நாடினன் யாதோ புந்தியை
அறிவிலார்க்கு உரைப்பவர் அவரிற் பேதையோர். (க)

உய்த்தனர் தேன்மழை உதவிப் போற்றினும்
கைத்திடல் தவிருமோ காஞ்சிரங்கனி
அத்தகவல்லவோ அறிவிலாதவன்
சித்தம துணர்வகை தெருட்டுகின்றதே. (உ)

தொலைக்கருந் திருவுடைச் சூரன் புந்தியைக்
கலக்கினும் உய்வகை கருதுகின்றிலன்
அலக்கணுற்றிருந்து நாம் இரங்கி யாவதென்
விலக்கரும் விதியையாம் வெல்ல வல்லமோ. (கந்தம்.) (ங)

உய்த்துணர்த்தினும் புல்லறிவினர் உணர்ந்துகொள்ளாராய் இகழ்ந்து விடுவர் என்பதும், காணாதார்க் காட்டுவார் தாமே காணாராய்க்கலங்கி நிற்பர் என்பதும் இவற்றான் விளங்குதல் காண்க.

அறிவின்றி அகஞ்செருக்கி நிற்கும் புல்லார்க்கு நல்லறிவு சொல்லல் அல்லலாகுமாதலால் அங்ஙனம் சொல்லலாகாதென்பது கருத்து.

'யென்றதற்குப் பொருள் இங்கே தக்க னென்பது; அக்கினிதேவ னென் பாருமுளர்'' என்பது பழைய குறிப்புரை. ஆய்ந்து நல்லன கொள்க. யூப தண்டு - யாகத்தூண் தண்டினைப் பிடுங்கியடித்துத் துரத்தினர் என்பது. விவிதம் - வேறுபாடு முத்தழல் - ஆகவநீயம், காருகபத்தியம், தெற் கிலங்கி என்ற மூன்று தீவகைகள். நீர்பெய்து என்பதை மறைத்த சொல் என்பாரும் உளர். பொய்ப்பருந்து - யாகத்திற்குப் பருந்து வடிவமாகச் செய்த ஒன்று. மடா - பெரும்பானை. அடா என்பது அடாத, அடுக்காத என்ற பொருள் தரும். சமைக்காத, உண்ணத் தகாத என்று இரு பொருள் களையும் தரும். அற என்ற - ஒன்றும் இல்லாமல் முழுவதையும். மாலை - வரிசை. நாகம் - பாம்புகள். பாம்புகளை மாலையாகப் போட்ட மார் புடையவர் மேகம்போல நின்று என விரித்துப் பூத கணங்கள் என வரு வித்துக் கொள்க. படைகள் இத்தனையும் செய்து நின்றன. 502 பாட வேறுபாடு. ''நாமகள் நாசியுதிர்த்து ரோகணி ரோமராசியளகம் சுலா வியே'' என்றபாடம் நன்று.

(உ௫0-உகசு)

## சிவபெருமான் இறந்தவர்களை எழுப்பி மீண்டும் போர்செய்வித்தல்

**511.** விழுந்தார ணுதிகட்கு மீளவாழ நாள்கொடுத்
தெழுந்துபோர் தொடங்குகென்று குன்றவில்லி யேவவே. உகஎ

### வேறு

**512.** சிரமுஞ் சிரமுஞ் செறிந்தன
சரமுஞ் சரமுந் தறிப்பவே. உகஅ

**513.** கனமுங் கனமுங் கனைத்தன
சினமுஞ் சினமுஞ் சிறக்கவே. உகக

**514.** கடையுங் கடையுங் கலித்தன
தொடையுந் தொடையுந் துரப்பவே. உஎ0

**515.** தாருந் தாருந் தழைத்தன
தேருந் தேருந் திளைப்பவே. உஎக

**516** தோலுந் தோலுந் துவைத்தன
கோலுங் கோலுங் குளிப்பவே. உஎஉ

**517.** தோளுந் தோளுந் தொடங்கின
தாளுந் தாளுந் தரிப்பவே. உஎங

**518.** கிரியுங் கிரியுங் கிடைத்தன
கரியுங் கரியுங் கடுப்பவே. உஎச

செல்வர், தனமையிற் படர்க்கை வந்த இடவழுவமைதி: செல் உழி - செல்லுழி, 'மெய்யீற் றுடம்படுமெய்' என்பர் நச். உடம்படு மெய்யல்லாத மெய். (நன். உயிர். 13 உரை)

9. ஒளி நிறூன் - தன்னிடத்துப் பிறர்க்குள்ள மதிப்பை நிலைக்கச் செய்யாமலும், துன் அரும் கேளிர் - பெறுதற்கரிய சுற்றத்தார், கொன்னே - வீணாக.

ஒளியாவது ஒருவன் 'தான் உளனாய காலத்து மிக்குத் தோன்றுதலுடைமை' (குறள் 971 உரை) புகழாவது இல்லறத்தின் வழுவாதார்க்கு இம்மைப்பயனாகி, இவ்வுலகின்கண் நிகழ்ந்து இறவாதுநிற்குங் கீர்த்தி. அஆ!, அருளின்கட் குறிப்பு, இது விட்டிசைத்துத் தளைக்கியைய முதற்கண் தனிக்குறில் நேரசையாக வந்தது. இழந்தான் - துணிவுபற்றி எதிர்காலம் இறந்த காலமாக வந்தது. 'துன்னியகேளிர், அருங்கேளிர் என்க.

10. வான் - மேகங்கள், தோய் - தவழப்பெற்ற, செற்றும் - வருத்தியும், வைத்து ஈட்டினூர் - பொருளை வைத்துக் குவித்தவர், உய்த்து - பற்பல மலர்களினின்றுந் தேனை எடுத்துக் கொண்டு வந்து, ஈட்டும் - பின்பு இழக்கின்றதற்குச் சேர்க்கும், கரி - சாட்சியாகும்.

'வான்தோய் மலைநாட' எனவே, அம்மழை தான் ஓரிடத்திலும் நிலைத்திராது காற்றுச் செலுத்தும் வழிச் செல்லுதல்போற் செல்வமும் ஊழினால் அலைக்கப் பெற்று அது செலுத்தும் வழிச் செல்லும் என்று தொனித்தல் காண்க.

(2) 'இளமை நிலையாமை'யாவது இளமைப்பருவத்து நிலையாமையுணர்த்துவதாம். இங்கே இளமை என்றது பதினாறு வயது தொடங்கி முப்பத்திரண்டு வரையு முள்ளதாய் விடயங்களில் மயங்குதற்கேற்ற யௌவனத்தை என்க. செல்வ மனுபவித்தற்குரிய காலம் இளமையாகலின் இது செல்வ நிலையாமையின் பின் வைக்கப்பட்டது.

11. குழவி இடத்தே - இன்பநுகர்தற்குரிய இளமைப் பருவத்திலேயே, புரைதீரா - குற்றம் நீங்காத, மன்னா - நிலை பெறுத லில்லாத, இன்னாங்கு - துன்பத்தோடு.

இன்னாங்கு ஒரு சொன்னீர்மைத்து. பதினாறளவும் கலை நிரம்பாவாதலின் குழவி என்று பெயர் என்பது பதுமனார் விருத்தி. என்று, வினைப்பொருண்மை குறித்து வந்தது என்றார் நச்சினார்க்கினியர் (தொல். சொல். 261). நரை என்பது ஈண்டு முதுமைப் பருவத்தை உணர்த்திற்று.

12. நட்பு நார் - நட்பினர்வைத்த பாசம், நல்லாரும் அஃகினார் - மகளிரும் அன்பு குறைந்தார்கள்; அற்பு தளையும் அவிழ்ந்தன - புத்திரர் முதலாயினோர் உன்பால் வைத்த அன்பாகிய கட்டும் தளர்ந்து போயின; ஆழ்கலத்து அன்ன கலி - கடலில் மூழ்கா நிற்கும் மரக்கலத்திலுள்ளார் கதறும் பேரொலி போலும் கூக்குரல், உள்காணாய் - இவை யனைத்தையும் உன் னுள்ளே ஆராய்ந்து பார்; ஊதியம் - பயன்.

வாழ்தலின் - இன் ஐந்தனுருபு ஏதுப் பொருட்டு. 'ஆழ்கலத் தன்ன கலுழ்' என்றும் பாடம். கலுழ் - துன்பம்.

13. சோர்ந்த - தம்மை யறியாமல் சரீரத்திருந்து வடிகின்ற, நடையினராய் - சலமலங்களை யுடையராய், பண்டம் - இச் சரீரமாகிய பொருள், பழிகாறும் - பிறரால் பழிக்கப்படுமளவும், இல் செறிந்து - இல்வாழ்க்கையிற் பொருந்தி, படரும் கண்ணினார்க்கு - ஒழுகும் கருத்துடையார்க்கு, ஏமநெறி - தமக்கு அரணாகிய தவநெறியில், படரும் ஆறு - துறந்து செல்லும் வகை, இல்லை என்பதாம்.

நடை - சலமலங்கள் என்பது ஓர் பழையவுரை; அவற்றுக்கு, இயக்கம் என்றும் பெயர் வழங்குதல் ஒப்பிடத்தக்கது; "இயக்கம் இரண்டு" என்றார் ஆசாரக் கோவையினும் (7). தளர்ந்த நடையினராய் என்னவுமாம். பழிகாறும் - செயப்பாட்டு வினைப் பொருளில் வந்த செய்வினை, ஏ - தேற்றம்.

14. மம்மர் கொள் - காம மயக்கங்கொண்ட, அடமனை - தாய், அணங்கு ஆகும் - காம நோயுண்டாக்குகின்ற தெய்வப் பெண்ணாய் இருப்பள்காண்.

இப் பாடல், கையில் ஊன்றுகோற் கொண்டு நடக்கின்ற கூனற் கிழவி ஒருத்தியைக் காட்டி, 'இவள் இப்போது பிடித்

534 மாக்கணங்கோள்படை வானநாடரைத்
தாக்கணங்குக டரைப்படுப்பவே. உகூ0

535. அடப்படப்பொரு தமரர்தம்படை
படப்படப்ரசா பதிபடைக்கவே. உகூக

(பொ - ரை) இனமான மலைகள் எல்லாம் இடிந்தன. பூமி வட்டம் அழிந்தன. மேகமும் இடியும் நீர் அற்றன; முழக்கம் நீங்கின. எழுகடலும் வற்றின; மேகங்களும் விண்மீன்களும் உதிர்ந்தன. புவிகள் முழுவதும் நடுங்கின. மாசுபடியும்படி வானத்துச்சி நெரிந்தன. பெரும்பாம்புகள் எவையும் ஓடியொளிந்தன. குலமலைகள் எல்லாம் பூமிக்குட் புதைந்தன. பூதங்களின் கால் மிதித்தலால் திசைகள் விழுந்தன பூமியைச் சூழ்ந்துநின்ற சக்கரவாளமலை சிதைந்தது. பூமியுட்புக்கழுந்திப போயின மலைகள் மட்டுமோ? பல பொருப்புக்களுமே புதைந்தன. காடுகள் பல அழிந்தன. பல குலமலைகளும் விழுந்தன. தேவர் பிணங்கள் மிகுந்தன. அப்பிணங்களைத் தின்று பூதபசாசங்கள் உடல் பருத்தன. கழுகுகளும் பேய்களும் ஆங்குக் கிடந்த பிணங்கள் பலவற்றையும் உண்டன. மேகம்போல முரச முழங்கின. சங்குகளும் எதிர் எதிராக முழங்கின. குதிரைகளும் யானைகளும் ஒன்றாகச் சேர்ந்து எதிர்க்க யானைகட்குப் பகையாகிய பாலலநோய் போன்ற பசாசுகள் கொன்று தின்றன. வெள்ளிமலையில் சந்திரன் போன்ற குடை கவித்து வந்தவர் இறந்தனர்; ஒரு கொள்ளிவாயுடைய நீண்ட பசாசு ஒன்று தீயைக் கொளுத்தியதால். வெள்ளிமலையைப் போன்ற கந்தருவர் உலகத்துள்ள குதிரைக் கூட்ட முழுவதையும் புரட்டின பேய்கள். குதிரை யானை முதலிய கூட்டத்தைக் கொண்ட படையுடைய வான நாட்டினரை (தேவரை)த் தீண்டி வருத்தும் பேய்கள் கொன்றன. இவ்வாறு கொல்லத் தேவர் படை இறப்பதைக் கண்டு மனம் பொறுமல் இறக்க இறக்கப் பிரமன் படைத்துப் படைத்து விட்டான்.

(வி - ம்.) குவலயம் - பூமி. வலயம் - வட்டம். எழிலி - மேகம். அசனி - இடி அற்றன என்பது மேகங்களின் நீர் அற்றன எனவும் அசனியில் முழக்கம் அற்றன எனவும் கொள்க. பெருவாரி-பெருங் கடல். உடு - விண்மீன், (நட்சத்திரம்). புடவி - பூமி. மாசு + உண = மாசுண - தூசிபடிய. உண்ண என்பது உண எனத் தொகுத்தலாயிற்று. மாசுணம் - பெரும்பாம்புகள் நெற்றி என்பது வானமுகட்டைக் குறித்தது. அண்டமுகடு நெரிந்தன என்க. மிதியிலே - பேய்பூதங்கள் கால்களான் மிதித்தலால். சூழ்வருதிகிரி - பூமியைச் சுற்றிய சக்கரவாளமலை. சிலைகொல் - சிலைமட்டுமோ? கொல் ஐயப்பொருளில் வந்த இடைச்சொல். சிலையைச் சிறு குன்று எனவும், பொருப்பைப் பெரிய மலை எனவும் கொள்க. அடவிகள் - காடுகள். மறிந்தன - மடங்கி விழுந்தன. அமரர் -

முன்னீர் மடவார் முறுவற் றிரள்குவிப்ப
நன்னீ ரயோத்தி நகரடைந்தான்—பொன்னீர்
முருகுடைக்குந் தாமரையின் மொய்ம்மலரைத் தும்பி
யருகுடைக்கு நன்னாட் டரசு. (உச)

மான்றேர்த் தொழிற்கு மடைத்தொழிற்கு மிக்கோனென்
றான்றேய்க்கும் வேலா னுயர்நறவத்—தேன்றோய்க்குந்
தார்வேந்தற் கென்வரவு தானுரைமி னென்றுரைத்தான்
றேர்வேந்தன் வாகுகனைச் சென்று. (உரு)

அம்மொழியைத் தூத ரரசற் கறிவிக்கச்
செம்மொழியாத் தேர்ந்ததனைச் சிந்தித்தே—யிம்மொழிக்
தக்கானை யிங்கே தருமி னெனவுரைப்ப [குத்
மிக்கானுஞ் சென்றான் விரைந்து. (உசு)

பொய்யடையாச் சிந்தைப் புரவலனை நோக்கித்தான்
செய்ய முகமலர்ந்து தேர்வேந்த—னையாநீ
யெத்தொழிலின் மிக்கனைகொல் யாதுன் பெயரென்றான்
கைத்தொழிலின் மிக்கானைக் கண்டு. (உஎ)

அன்ன மிதிப்ப வலர்வழியுந் தேறல்போய்ச்
செந்நெல் விளைக்குந் திருநாடர்—மன்ன [றான்
மடைத்தொழிலுந் தேர்த்தொழிலும் வல்லென்யா னென்
கொடைத்தொழிலின் மிக்கான் குறித்து. (உஅ)

என்னை யிருங்கானி னீத்த விகல்வேந்தன்
றன்னைநீ நாடெனத் தன்கோதை—மின்னுப்
புரைகதிர்வேல் வேந்தன் புரோகிதனுக் கிந்த
வுரைபகர்வ தானா னுணர்ந்து. (உகூ)

காரிருளிற் பாழ்மண்ட பத்தேதன் காதலியைச்
சோர்துயிலி னீத்த துணிவன்றோ—தேர்வேந்தற்
கென்றறைந்தா னோர்பின் றெதிர்மாற்றந் தந்தாரைச்
சென்றறிந்து வாவென்று டோர்ந்து. (௩௦)

மின்னாடு மால்வரையும் வேலையும் வேலைசூழ்
நன்னாடுங் கானகமு நாடினான்—மன்னு
கடந்தாழ் களியானைக் காவலனைத் தேடி
யடைந்தா னயோத்தி நகர். (௩௧)

கானகத்துக் காதலியைக் காரிருளிற் கைவிட்டுப்
போனதூஉம் வேந்தற்குப் போதுமோ—தானென்று
சாற்றினா னந்தவுரை தார்வேந்தன் றன்செவியி
லேற்றினான் வந்தா னெதிர். (௩௨)

ஒண்டொடி தன்னை யுறக்கத்தே நீத்ததூஉம்
பண்டை விதியின் பயனேகாண்—டண்டராளப்
பூத்தாம வெண்குடையான் பொன்மகளை வெவ்வனத்தே
நீத்தானென் றையுறே னீ. (௩௩)

எங்க ணுறைந்தனைகொ லெத்திசைபோய் நாடினைகொல்
கங்கைவள நாட்டார்தங் காவலனை—யங்குத்
தலைப்பட்ட வாறுண்டோ சாற்றென்றாள் கண்ணீ
ரலைப்பட்ட கொங்கையா ளாங்கு. (௩௪)

வாக்கினான் மன்னவனை யொப்பான் மறித்தொருகா
லாக்கையே நோக்கி னவனல்லன்—பூக்கமழுங்
கூந்தலாய் மற்றக் குலப்பாக னென்றுரைத்தா
னேந்துநூன் மார்ப னெடுத்து. (௩௫)

மீண்டோர் சுயம்வரத்தை வீமன் றிருமடந்தை
பூண்டாளென் றந்தணநீ போயுரைத்தா—னீண்ட
கொடைவேந்தற் கித்தூரந் தேர்க்கோலங் கொள்வான்
படைவேந்த னென்றாள் பரிந்து. (௩௬)

எங்கோன் மகளுக் கிரண்டாஞ் சுயம்வரமென்
றங்கோர் முரச மறைவித்தான்—செங்கோலா
யந்நாளு நாளை யளவென்றா னந்தணன்போய்த்
தென்னாளுந் தாரானைச் சேர்ந்து. (௩௭)

வேத மொழிவாணன் மீண்டு சுயம்வரத்தைக்
காதலித்தாள் வீமன்றன் காதலியென்—றோதினா
னென்செய்கோ மற்றிதனுக் கென்றா னிகல்சீறு
மின்செய்த வேலான் விரைந்து. (௩௮)

குறையாத கற்பினாள் கொண்டானுக் கல்லா
விறவாத வேந்திழையா ளின்று—பறிபீறி
நெல்லிற் பருவரா லோடு நெடுநாடா
சொல்லப் படுமோவிச் சொல். (௩௯)

என்மே லெறிகின்ற மாலை யெழினளன்றன்
முன்னே விழுந்ததுகாண் முன்னாளி—னன்னதற்குக்
காரணந்தா னீதன்றோ வென்றான் கடாஞ்சொரியும
வாரணந்தா னன்னான் மதித்து. (௪௦)

முன்னை வினையான் முடிந்ததோ மொய்குழலா
ளென்னைத்தான் காண விசைந்ததோ—தன்மரபுக்
கொவ்வாத வார்த்தை யுலகத் துரைப்பட்ட
தெவ்வாறு கொல்லோ விது. (௪௧)

நுகர்விக்கும் உயிராகிய கூத்தாடி, வெளிப்பட்டுச் சென்று விட்டால், அவன் வாழ்ந்திருந்த நடன சாலையாகிய உடலை நாரினாற்கட்டி இழுத்தாலென்ன? நன்றாக ஆடையாபரணங்களை ஆராய்ந்தணிந்து குழிகளில் புதைத்து வைத்தாலென்ன ? அவ்வாறன்றிக் கண்டகண்ட இடங்களில் எறிந்து விட்டாற்றா னென்ன ? கண்ட பலரும் பழித்தாற்றானென்ன ?

கூத்தாட வேண்டிப் பலவகையாகிய வேடங்களை மேற் கொண்டுவந்து நாடகமாடி அந்நாடக முடிந்த பிறகு தாம் மேற் கொண்டிருந்த வேடத்தை ஒழித்துச் செல்லுங் கூத்தரைப்போல வினைப்பயனை அனுபவிப்பது காரணமாக இருவினைக்கு ஈடாகிய பலவகைப்பட்ட உடல்களைத் தாங்கி அந்த அனுபவம் நீங்கிய வுடன் தான் மேற்கொண்ட உடலைவிட்டுச் செல்லுகின்ற உயிர் இங்குக் கூத்தனென்று உவமிக்கப்பட்டமை காண்க. பார்த்த உழி என்பது பார்த்துழி என்று தொகுத்தல் விகாரம் பெற்றது. பிணத்தை ஈர்த்தல், அடக்கல், பெய்தல் முதலியன சிற்சில சமயத்தாரின் ஆசாரம். மணிமேகலை, சக்கரவாளக்கோட்ட முரைத்த காதையைப் பார்க்க.

27. மழைநீரில் தோன்றி யழிகின்ற குமிழியைப்போல பலமுறையும் உண்டாகி அழியும் தன்மையுடையது இவ்வுடம் பென்று நினைத்து, பிறவியாலுண்டாகும் மயக்கத்தினை, யாம் தீர்ப்போம், என்று உணரும் கலக்கமில்லாத நல்லறிவை யுடையாரை இப்பெரிய வுலகத்தில், ஒப்பவர் யாவருளர் ?

28. உடம்பானது மலைமேல் அசைந்துகொண் டிருக்கிற மேகத்தைப் போலக் காணப்பட்டு, தோன்றிய அப்பொழுதே, நிலைபெறுதலின்றி நீங்கிவிடும் ; ஆதலால், உடம்பை நல்வினை காரணமாக உறுதிப்பாடுள்ளதாக அடைந்தவர்கள் தாம் அடைந் துள்ள உடம்பினால் பெறுதற்குரிய பயனாகிய அறத்தைச் செய்து கொள்ளக் கடவர்.

உறுதிப்பாடாவது தேகத்தை நோயின்மை முதலிய குறைக ளின்றிப் பெற்றிருத்தல். அதனை எய்தல் அரிதென்பார் யாக் கையை யாப்புடைத்தாப் பெற்றவரென்றார். யாக்கையால் பயனா வது, அறம் செய்தல். மற்று - வினைமாற்றுப் பொருளில் வந்தது.

வண்டார் வளவயல்சூழ் மள்ளுவநாட் டெங்கோமான்
றண்டார் புனைசந் திரன்சுவர்க்கி—கொண்டாடும்
பாவலன்பா னின்ற பசிபோல நீங்கிற்றே
காவலன்பா னின்ற கலி. (சகூ)

ஆமை முதுகி லலவன் றுயில்கொள்ளுங்
காமர் நெடுநாடு கைவிட்டு—வீமன்றன்
பொன்னகரி சென்றடைந்தான் போர்வேட் டெழுங்கூற்ற
மன்னகரி யொன்றுடையா னங்கு. (சக)

வெற்றித் தனித்தேரை வீமன் பெருங்கோயின்
முற்றத் திருத்தி முறைசெய்யுங்—கொற்றவற்குத்
தன்வரவு கூறப் பணித்துத் தனிப்புக்கான்
மன்விரவு தாரான் மகிழ்ந்து. (ருo)

கன்னி நறுந்தேறன் மாந்திக் கமலத்தின்
மன்னித் துயின்ற வரிவண்டு—பின்னையும்போய்
நெய்தற் கவாவு நெடுநாட நீயென்பா
லெய்தற் கவாவியவா றென். (ருக)

இன்றுன்னைக் காண்பதோ ராதரவால் யானிங்ஙன்
மன்றன் மலர்த்தாராய் வந்தடைந்தே—னென்று
ஞெளியார்வேற் கண்ணுண்மே லுள்ளந் துரப்பத்
தெளியாது முன்போந்த சேய். (ருஉ)

ஆதி நெடுந்தேர்ப் பரிவிட் டவையாற்றிக்
கோதி லடிசிற் குறைமுடிப்பான்—மேதிக்
கடைவாயிற் கார்நீலங் கண்விழிக்கு நாடன்
மடைவாயிற் புக்கான் மதித்து. (ருஙு)

ஆதி மறைநூ லனைத்துந் தெரிந்துணர்ந்த
நீதி நெறியாளர் நெஞ்சம்போல்—யாது
நிரப்பாம லெல்லா நிரம்பிற்றே பொற்றேர்
வரப்பாகன் புக்க மனை. (நூச)

இடைச்சுரத்திற் றன்னை யிடையிருளி னீத்த [தொழில்கள்
கொடைத்தொழிலா னென்றயிர்த்த கோமான்—மடைத்
செய்கின்ற வெல்லாந் தெரிந்துணர்ந்து வாவென்று
ணைகின்ற நெஞ்சா னயந்து. (நுரு)

கோதை நெடுவேற் குமரனையுந் தங்கையையு
மாதி யரச னருகாகப்—போத
விளையாட விட்டவன்றன் மேற்செயனு டென்றாள்
வளையாடுங் கையான் மதித்து. (நுசு)

மக்களைமுன் காணு மனநடுங்கா வெய்துயிராப்
புக்கெடுத்து வீரப் புயத்தணையா—மக்காணீ
ரென்மக்கள் போல்கின்றீர் யார்மக்க ளென்றுரைத்தான்
வன்மக் களியானை மன். (நுஎ)

மன்ன னிடதத்தார் வாழ்வேந்தன் மக்கள்யா
மன்னை தனைக் கான்விட் டவனேக—விந்நகர்க்கே
வாழ்கின்றோ மெங்கள் வளநாடு மற்றொருவ
னாள்கின்றா னென்றா ரழுது. (நுஅ)

ஆங்கவர் சொன்ன வுரைகேட் டழிவெய்தி
நீங்கா வுயிரோடு நின்றிட்டான்—பூங்காவின்
வள்ளம்போற் கோங்கு மலருந் திருநாட
னுள்ளம்போற் கண்ணீ ருகுத்து. (நுகூ).

உங்க ளரசொருவ ளைனீ ரோடிப்போந்
திங்க ணுறைத லிழுக்கன்றோ—செங்கை
வளவரசே யென்றுரைத்தான் மாதவத்தாற் பெற்ற
விளவரசை நோக்கி யெடுத்து. (கூ0)

நெஞ்சாலிம் மாற்ற நினைந்துரைக்க நீயல்லா
தஞ்சாரோ மன்ன ரடிமையா—வெஞ்சாது
தீமையே கொண்ட சிறுதொழிலா யெங்கோமான்
வாய்மையே கண்டாய் வலி (கூக)

எந்தை கழலிணையி னெம்மருங்குங் காணலாங்
கந்து சுளியுங் கடாக்களிற்றின்—வந்து
பணிமுடியிற் பார்காக்கும் பார்வேந்தர் தங்கண்
மணிமுடியிற் றேய்ந்த வடு. (கூஉ)

மன்னர் பெருமை மடைய ரறிவரோ
வுன்னை யறியா துரைசெய்த—வென்னை
முனிந்தருள லென்று முடிசாய்த்து நின்றான்
கனிந்துருகி நீர்வாரக் கண். (கூங)

கோற்றக் குமரனையுங் கோதையையுந் தான்கண்டு
மற்றவன்றா னங்குரைத்த வாசகத்தை—முற்று
மொழிந்தாரம் மாற்ற மொழியாத முன்னே
யழிந்தாள் விழுந்தா ளழுது. (கூச)

கொங்கை யளைந்து குழறிருத்திக் கோலஞ்செ
யங்கை யிரண்டு மடுபுகையா—லிங்ஙன்
கருகியவோ வென்றழுதாள் காதலனை முன்னாட்
பருகியவேற் கண்ணாள் பதைத்து. (கூரு)